# இலக்கியம் ஈந்த தமிழ்






கா. அப்துல் கபூர், எம்.ஏ.,
கல்லூரி முதல்வர், பேராசிரியர்,
ஹாஜி கருத்த ராவுத்தர் கௌதியா கல்லூரி,
உத்தமபாளையம், (மதுரை மாவட்டம்)

சாந்தி நூலகம்
2/122, பிராட்வே • சென்னை-1.

# பதிப்புரை

"மனித முயற்சியின் உயர்ச்சியானது பாலைவனத்தைப் பசுஞ்சோலையாக்கியுள்ளது; காடுகளை நாடாக்கியுள்ளது; மலை குடைந்து வழி கண்டு, நிலங்குடைந்து நிதி கண்டுள்ளது; விண்ணை முட்டும் இல்லங்களையும், கண்ணைக் கவரும் சாலைகளையும் சமைத்துள்ளது. உணவிலே புதுமை! ஊர்தியிலே புதுமை! உடையிலே புதுமை! நடையிலே புதுமை! அணியிலே புதுமை! அனைத்திலும் புதுமை!"—இவ்வாறு கூறும் இந்நூலாசிரியர் பேராசிரியர் கா. அப்துல் கபூர், எம்.ஏ., அவர்களைத் தமிழுலகம் நன்கறியும். மாணவருலகம் மிக நன்கறியும். புன்னகை பூத்த முகமும், காண்போரைக் கனிவிக்கும் தோற்றமும், இன்சொல் கூறும் பண்பும் அவரது தனிச் சிறப்புக்கள்; பகைவரையும் பிணித்துவிடும் நல்லியல்புகள். பேராசிரியர் அவர்கள் சிறந்த கட்டுரை வன்மையுடன், பாவன்மையும் நாவன்மையும் வாய்க்கப்பெற்றவர்கள். தமிழகத்தில் மட்டுமன்றி, கடல் கடந்த நாடுகளிலும் கன்னித் தமிழ்ப் பணியாற்றி

வருபவர். இந்நூலையளித்த அவர்களுக்கு எங்கள் நன்றி உரியது! சொற்செறிவும் பொருட்செறிவும் நிறைந்த சொற்றொடர்கள் வாயிலாக எளிய இனிய அருவியோட்டத்தைப் போன்ற அழகிய நடையில் அவர்கள் வாசகர்களுக்கு வற்றாத இன்பத்தை வாரி வழங்குகிறார்கள்.

"புதுமை வளர இலக்கியம் வளரும். இலக்கியம் வளரத் தமிழ் மொழி வளரும். தமிழ் மொழி வளரத் தமிழகம் வளரும். தமிழகம் வளரத் தாரணி வளரும்"— இந்நூலின் இறுதியில் அமைந்த இப்பகுதி அவர்களின் உள்ளத்தையும் ஆர்வத்தையும் உரிய முறையில் காட்டுகின்றது. தமிழன்பர்கள் இதற்குத் தகுந்த ஆதரவு தந்து எங்கள் தமிழ்ப் பணிக்கு ஊக்கமூட்ட வேண்டுகிறோம்.

சென்னை.

சாந்தி நூலகத்தார்

# முன்னுரை

**வாழப்** பிறந்த வளமார் மொழிகளுள் ஒன்ருகிய தமிழ் மொழி உலகுக்கீந்த உயர்தனிச் செல்வங்கள் பல. தனி சிறந்த நாகரிகமும், மிக உயர்ந்த பண்பாடும், வனப் பொழுகும் வரலாறும், எழில் பொழியும் இலக்கிய மும் அவற்றுள் சில. அச்சிலவற்றுள்ளும், இன்றளவும் குன்ருமல் எஞ்சி நிற்பது இலக்கியச் செல்வம் ஒன்றே எனலாம். இலக்கியச் செல்வத்தின் துணைகொண்டே ஏனைய செல்வங்களின் இயல்பினை நாம் ஒருவாறு உணர் கின்ரேம்.

தொன்மை வாய்ந்த தமிழ் மண்ணில் வாழ்ந்துயர்ந்த நம் முன்னேர்களின் நல்லுள்ளங்களில் முகிழ்த்தெழுந்த எண்ணங்களெல்லாம் இலக்கியச் சோலையின் இணையிலா மலர்களாகப் பூத்துப் பொலிவடைகின்றன. அம்மலர்களின் மணத்தினை நுகர்ந்த பிற்காலப் புலவர்கள் குயில்களைப் போன்று குரலெழுப்பி எழில் பெருக்கினர். மலர் மணமும் இசை இன்பமும் இணைந்து நின்று, கண்ணுக்கும் கருத்துக்

கும் பெருவிருந்தளிக்கின்றன. அவ்விருந்தினை அருந்தின், தேம்புகின்ற வாழ்வுக்கொரு தெம்பினைப் பெற முடியும். இவ்வெண்ணத்தின் அடிப்படையில் தோன்றுவது, ‘இலக்கியம் ஈந்த தமிழ்!’

இந்நூலுள் அடங்கியுள்ள கட்டுரைகளிற்பல வானில் வந்தவை. அவை, சில மாறுதல்களுடன் வெளிவருகின்றன. உடன்பாடீந்த வானொலி நிலையத்தாருக்கென் நன்றி உரியது! தூங்கிக்கிடந்த என்னைத் தட்டியெழுப்பி இம் முயற்சியிலீடுபடுத்திக் கவர்ச்சியாக நூலினை வெளியிட்ட சாந்தி நூலகத்தாருக்கு என் நெஞ்சம் நிறைந்த நன்றி உரியது! அன்பு கூர்ந்து மதிப்புரை வழங்கிய பேராசிரியர் மா. இராசமாணிக்கனார் அவர்களுக்கு என் உளங்கனியும் நன்றி உரியது!

உத்தமபாளையம்,
15—8—'57

கா. அப்துல் கபூர்

மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்
டாக்டர் - மா. இராசமாணிக்கனர், எம்.ஏ., எல்.டி.,
எம்.ஓ.எல்., பிஎச்.டி. அவர்கள்
மகிழ்ந்தளித்த

# மதிப்புரை

'**இலக்கியம் ஈந்த தமிழ்**' என்னும் பெயர் கொண்டு மிளிரும் இந்நூல், தமிழ் வளர்த்த பண்பாடு, இலக்கியம் காட்டும் எழிலரசிகள், கவிதையில் உவமை, சீட்டுக்கவி, நாட்டுப் பாடல்களில் வரலாறு முதலிய பதினொரு கட்டுரைகளைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு கட்டுரையும் தக்க இலக்கிய மேற்கோளுடன் எழுதப்பட்டுள்ளது. தமிழ் நடை படிக்கப் படிக்க இனிமை பயப்பதாக உள்ளது. மிகப் பெரிய வாக்கியங்கள் ஒரு சில இருக்கின்றன. ஆயினும், அவை படிக்க இன்பந்தரும் முறையில் எளிய நடையில் அமைந்துள்ளன. பல நூல்களில் காணப்பெருத எளிய - இனிய செந்தமிழ் நடையை இந்நூலிற்கண்டு அக மகிழ்கின்றேன். இந்நூல் தமிழார்வம் உள்ள பொதுமக்களுக்கும், பல்கலைக் கழக மாணவர்க்கும் இலக்கிய அறிவையும் தமிழ்ப் பற்றையும் ஊட்ட வல்லது. இந்நூலாசிரியருக்கு இயற்கையாக அமைந்துள்ள எளிய இனிய செந்தமிழ் நடையில் மேலும் பல நூல்கள் வெளி வரல் வேண்டுமென்பது எனது பெருவிருப்பம். ஆசிரியரது இந்நன்முயற்சியை யான் உளமாரப் பாராட்டுகின்றேன்.

மதுரை,
15—7—57

மா. இராசமாணிக்கம்




# பொருளடக்கம்




# 1. தமிழ் வளர்த்த பண்பாடு

இலக்கியம், கலை, நாகரிகம், பண்பாடு என்பன போன்ற சொற்கள் இன்றைய உலகின் ஒவ்வொரு பகுதியிலும் மிகுதியாக ஒலித்துவரக் காண்கிறோம். பல்லாண்டு காலம் அடிமைத் தளையிலே சிக்கி மிடிமை வாழ்வு நடாத்திய நாடுகள் விழிப்படைந்து விடுதலை யடைந்ததும், களிப்படைந்து முன்னேற விழைகின்றன.

பண்டையோர் வாழ்க்கை முறைகளைப் படம் பிடித்துக் காட்டும் கண்டை நிகர் இலக்கியங்களும், மக்கள் அழகுணர்ச்சியின் நுண்ணிய உயிர்ப்பெனத் திகழும் அருங் கலைகளும், அகத்தையும் புறத்தையும் ஒருங்கே உயர்த்துவதற்குதவுகின்ற நாகரிகமும், இவை மூன்றாலும் உருவாக்கப்படுகின்ற பண்பாடும் ஒரு நாட்டு முன்னேற்றத்தின் ஒப்பில்லாத் தூண்களெனச் சொல்லலாம். ஆகவே, முன்னேற்றத்தை நோக்கி விரைந்து செல்ல விழைகின்ற மக்கள், இலக்கியத்தைப் போற்றுகின்றார்கள்; கலையை வளர்க்கின்றார்கள்; நாகரிகத்தைக் குறித்துப் பேசுகின்றார்கள்; பண்பாட்டின் மேம்பாட்டை உணர்கிறார்கள். இந்நிலையிலேதான் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே இன்சுவை இலக்கியங்களையும் கவின்பெறு கலைகளையுங் கொண்டு நாகரிக வாழ்வு நடாத்திய நற்றமிழ் நாடு, பண்டைப் பெருமைகளை எண்ணி எண்ணி மகிழ்கின்றது; ஆயிரமாயிரம் ஆண்டுகளாய் அழியாதபடி போற்றி வந்த பண்பாட்டின் உயர்வினை உன்னியுன்னி உவகை பூக்கின்றது.

'பண்பாடு' என்னும் சொல்லே அதன் பொருளைத் தெளிவாக விளக்குகின்றது. வறண்ட நிலத்திலே வளமாக நீர் பாய்ச்சி, ஏர் பூட்டியுழுது, பண்பட்ட நிலத்திலே விதையினை விதைத்து, எருவிட்டு வளர்த்துக் களைபிடுங்கிக் காத்து, பொன்னெனக் குலுங்கும் செந்நெல்லைக் கண்டு சிந்தை குளிர்கின்றான் உழவன். வண்டமிழ்ப் பண்பைத் தண்டமிழ்க் குறளால் பாடி வான்புகழ் கொண்ட வள்ளுவரும், பண்பாடு வளர்க்கும் செஞ்சொல்லோவியர்களான புலவர் பெருமக்களை உழவுக் கண்கொண்டு நோக்கினார் ;

> " வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க
> சொல்லே ருழவர் பகை."

எனப் பாடினார். படை வீரர்கள் வில்லையே ஏராகக் கொண்டு பகைப் புலங்களை உழுகின்றார்கள். சொல்லாய்ந்த கூத்தர்களாகிய புலவர்களோ, சொல்லையே ஏராகப் பிடித்து மக்கள்தம் நெஞ்சக் கழனியை உழுது பண்படுத்தி, நற்கருத்தாம் வித்துக்களை விதைத்து, நல்வாழ்வாம் பயிரைக்கண்டு மகிழ்கின்றார்கள். இவ்வாறு வாழ்வுப் பயிரின் வித்தெனத்தகும் கருத்துக் கருவூலங்களைக் கன்னித் தமிழிலே வடித்தெடுத்த புலவர்கள், தமிழ் நாகரிகத்தையும் பண்பாட்டையும் பொருத்தமான இடங்களிலே புலப்படவைத்துள்ளார்கள்.

ஒரு நாட்டின் உயர்வு, அந்நாட்டு மக்களைப் பொறுத்ததே எனப்புகன்றார் பைந்தமிழ்மூதாட்டியாரான ஔவைப் பாட்டியார். நாடாயிருப்பினும் காடாயிருப்பினும், பள்ளமாய் இருப்பினும் மேடாய் இருப்பினும், நிலம் பெருமைக்கு அடிப்படையன்று. விண்ணை முட்டும் மலைகளும்,

கண்ணைக் கவரும் இயற்கையெழிலும், இன்பச் சோலை களும் இனிய சாலைகளும், வற்றாத ஆறுகளும் வளமான வயல்களும் இருப்பதனால் நாட்டிற்கு உயர்வு வாராது. வறண்ட பாலைவனமாயினும், ஆங்கு வாழ்கின்ற மக்கள் நல்லவர்களாகிவிட்டால், அந்நிலம் பெருமைக்குரியதா கிறது. இது கருதியே,

*"நாடா கொன்றோ காடா கொன்றோ*
*அவலா கொன்றோ மிசையா கொன்றோ*
*எவ்வழி நல்லவ ராடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே!"*

என வாழ்த்தினார் ஔவையார். தீந்தமிழ்ப்பாவலர் திரு வள்ளுவரும்,

*"உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்*
*சேரா தியல்வது நாடு,"*

என்றார்.

வள்ளுவர், 'நாடு நாடாகத் திகழ வேண்டுமாயின், மக்களை வருத்தும் பசிப்பிணி இருத்தல் கூடாது. பசிப் பிணியுடன் உடற்பிணியும், உட்பகையும், வெளிப்பகை யும் இல்லாத நாடே நாடு,' என நவின்றார்.

இத்தகைய நாட்டிலே வாழ்கின்ற மக்கள் எத்தகைய நாகரிகத்தைப் பின்பற்றி வாழவேண்டுமென்பதையும் வள்ளுவத் தோன்றல் தெள்ளுதமிழ்க் களஞ்சியத்திலே தெளிவுறுத்தத் தவறவில்லை.

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்."

என்பது அப்பெருநாவலர் பேருரை. நம்மொடு பழகிய ஒருவர், நமது உணவில் நஞ்சு கலந்து நம்மைக் கொல்லத் துணிகின்ருர். அந்த நேரத்தில் அதைக் கண்டுணர்ந்து நாம் கூறிவிட்டால், அவர் உள்ளம் எவ்வளவுவேதனைப்படு மென்பதையுணர்ந்து, அந்நஞ்சு கலந்த உணவைக்கூட நாம் உண்டு அமைய வேண்டும். அதுவே யாவராலும் விரும்பத்தக்க நாகரிகமான கண்ணேட்டத்தை விரும்புபவர் செயல். இத்தகைய உள்ள உயர்வுதான் தமிழ் வளர்த்த நாகரிகம். இந்நாகரிகம் உருவாக்கிய பண்பாடுதான் திருக்குறளின் உயிர் நாடி போல, 'பண்புடைமை' என்னும் தலைப்பினைத் தாங்கி மாருத முறையில், நூருவது அதி காரமாகவும் அமைந்தது. 'உலக மென்பது உயர்ந்தோர் மாட்டே' என்னுமாப்போல, பண்புடையோரிடத்தில் பொருந்தியிருப்பதால் உலகம் உள்ளதாகி இயங்குகின்ற தென்ற கருத்தையும் இங்குதான் வள்ளுவர் வெளியிடு கின்ருர்.

அறிவின் சிறப்பையும் ஆற்றலையும் குறித்து வானளா வப் புகழ்ந்த வள்ளுவர்—"அறிவுடையார் எல்லாம் உடை யார்," என்ற முடிவுக்கு வந்த வள்ளுவர்—அறிஞர் பெரு மகன் ஒருவனைப் பார்க்கின்ருர். அவனே, அரம் போன்ற திறமுடையான்; தன் அறிவுத் திறத்தால் அவனியின் அறிஞர் பெருமக்களையெல்லாம் வென்று வெற்றிக் கொடி நாட்டியவன்; எல்லாம் அறிந்தவன்; ஆனல், மனிதப் பண்பு அவனிடத்தில் மருந்துக்குக்கூடக் கிடை யாது. ஆகவே, அவன் வள்ளுவர் கண்களுக்கு ஓங்கி வளர்ந்ததோர் கம்பமெனக் காட்சி தருகின்ருன்.

"அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்."

இதுபோன்று, அறிவிருந்தும் பண்பிழந்த மக்களை வள்ளுவனார் காய்கின்ற இடங்கள் மிகப்பல. அவர், பிற உயிர்களின் துன்பத்தைத் தன் துன்பம்போலக் கருதிக் காப்பாற்றுதவனை நோக்கி, "அறிவினுன் ஆகுவதுண்டோ?" என்கிருர். சான்றோர், உறுப்புக்களால் உயர்வு பெற்றிருக்கின்ற ஒருவனையோ, ஒருத்தியையோ மனிதப் புனிதரெனக் கருதி மதி மயங்கார். பரந்த மார்பும், விரிந்த நெற்றியும், அறிவொளி வீசும் கண்களும், அழகொளிமிளிரும் முகமும், குன்றனைய தோளும், கண்டனைய மொழியும் வாய்க்கப் பெற்ருன் ஒருவன்; அறல்போல் கூந்தலும், பிறைபோல் திருநுதலும், கொலைவிற் புருவமும், குவளைக் கண்ணும், எட்பூ நாசியும், எழிலார் காதும், பாளைச் சிரிப்பும், பவழமேனியும் வாய்க்கப் பெற்ருள் ஒருத்தி; இவர்கள் இருவரும் மனிதரென்னும் தகுதியைப் பெற வேண்டுமாயின், எந்த அளவுக்குப் பண்புடையவர்களென்பதையே நோக்குதல் வேண்டும்.

"உறுப்பொத்தல் மக்களொப் பன்ருல்; வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு."

வள்ளுவரின் இவ்வாய்மொழிக்கொப்ப, உறுப்புக் குறைவுபட்டும் இன்றளவும் இலக்கியத்தில் புகழ் மணம் பரப்பிப் பொலிவுடன் திகழும் புலவர் பெருமக்களைப் பார்க்கிருேம். அவர்கள் பெற்றிருந்த பண்பாடு காரணமாக, அங்கம் குறைந்தும் தங்கமெனத் திகழ்கின்ருர்கள். உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், அந்தகக் கவி வீரராகவ

முதலியார், இரட்டைப் புலவர்கள், மாம்பழக் கவிச்சிங்க நாவலர் போன்ருேர் இதற்குப் போதிய சான்ருவர்.

இவ்வாறு பண்டைத் தமிழர் கண்ட மனிதப் பண்பையே தமிழ்ப் பண்பெனப் பகர்கின்ருேம். பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழ் மண்ணிலே ஊறிக் கிடக்கின்ற உயரிய பண்பாக அது காட்சி தந்து கனிவிக்கின்றது. சங்கத்துச் சான்ருேர் தந்த சொல்லோவியங்களின் உயிர் நாடியென அது ஒளி விடுகிறது. கணியன் பூங்குன்றனுர் பாடிய பாட்டின் தொடக்கம் இப்பண்பாட்டின் அடிப்படையை அழகுற அமைத்துக் காட்டுகிறது.

"யாதும் ஊரே; யாவரும் கேளிர்!" இதுவே தமிழ்ப் பண்பாட்டின் தலையாய நிலை. பண்டைநாட்புலவர்களும், இடைக்காலப் பிற்காலப் புலவர்களும், இவ்வுயரிய கொள்கையையே பல்வேறு உருவங்களில் தங்கள் கவிதைகளிலும், காவியங்களிலும், தனிப்பாடல்களிலும், பெருநூல்களிலும் படம் பிடித்துக் காட்டியுள்ளார்கள். 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்,' எனப் புகன்ருர் பெருநாவலர் பெருந்தகை. 'ஒன்றே குலமும்; ஒருவனே தேவனும்,' என்ருர் திருமந்திரம் தந்த திருமூலர். சோழ நாட்டிலே பிறந்து, பாண்டி நாட்டிலே கணவனைப் பறிகொடுத்து, சேர நாட்டிலே கோயில் கொண்ட கண்ணகியின் வரலாற்றைக் கன்னித் தமிழிலே பாடினுர் இளங்கோவடிகள். அயோத்தியிலே அன்புத் தம்பியர் மூவரைக் கொண்டு, கங்கைக் கரையிலே வெங்களிறனைய வேடன் குகனுடன் தோழமை பூண்டு, குரங்கினத் தலைவனும் சுக்கிரீவனை அன்போடணைத்து, அரக்கர் குலத்தின் வீடணனையும் உடன் சேர்த்து, உடன் பிறந்தோர் எழுவரெனக்

கருதிய இராமனின் காதையைப் பாடினுர் கம்பர். "பிறப்பில் உயர்வும் தாழ்வும் சொல்லல் மடமை," என்னும் இன்றைய புரட்சிக் கவிஞர்களின் எழுச்சிக் குரலும், இப்பண்பாட்டின் அரணுகவே அமைந்துவிடுகின்றது. மக்களினத்தின் ஒருமையையும் பெருமையையும் ஐக்கிய நாட்டவையினர் ஆராய்ந்து கூறுவதற்கும் எத்தனேயோ ஆண்டுகட்கு முன்னுல் அவை தமிழர்களின் குறிக்கோளாய் இலங்கின என்பதை நினேக்கவே நெஞ்சு இனிக்கின்றது !

இப்பண்பாட்டிலே ஊறிய தமிழன், அலேகளேப் பிளந்தும், மலேகளேக் கடந்தும் அயல் நாடுகளிலே அடியெடுத்து வைத்தான் ; ஈழத்தையும், கடாரத்தையும், மலாயாவின் சோலேகளேயும், சாவாவின் சாலேகளேயும், ஆப்பிரிக்காவின் காடுகளேயும் தனது சொந்த நாடுகளாகவே கருதினுன் ; அங்கு வாழ்ந்தோரையெல்லாம் உடன் பிறந்தோராகக் கருதி உறவு பூண்டான் ; அழகு நகர்களே அமைத்தான் ; உழைத்து உழைத்து, மண்ணுன நிலத்தைப் பொன்னுன நிலேக்கு மாற்றினுன். உள்நாட்டிலும் உயர்ந்த நிலேயிலே வாணிகம் வளம்பெற்றது.

*" நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்*
*காலின் வந்த கருங்கறி மூடையும்*
*வடமலேப் பிறந்த மணியும் பொன்னும்*
*குடமலேப் பிறந்த ஆரமும் அகிலும்*
*தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்*
*கங்கை வாரியும் காவிரிப் பயனும்*
*ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும்*
*அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி*
*வளந்தலே மயங்கிய நனந்தலே மறுகு "*

இவ்வாறு உலகப் பொருள்களெல்லாம் தமிழகத்துக் கடை வீதிகளிலே குன்று போலக் குவிந்து கிடந்தன. வாணிகத்தினிமித்தம் வந்த வடவரும், சீனரும், கிரேக்கரும், உரோமரும், அராபியரும் தமிழ்ப் பண்பாட்டின் உயர்வைக் கண்டு உவந்து சென்றனர்.

இப்பண்பாடு சமயத் துறையிலே ஒப்புயர்வற்ற ஓர் ஒருமை நோக்கைப் பயந்தது. உள்ளொளி பெருக்குவதில் சிந்தையைச் செலுத்திய தமிழகம், பத்திச் சுவை நனிசொட்டச்சொட்டப் பாடிய கவி வலவர்களின் பிறப்பிடம். மனித குலத்தின் உயர்வுக்காகப் பாடு பட்ட சமய நெறிகள், தமிழகத்திலே பரவிய வரலாறு, விந்தைக்குரியதாகவே அமைந்துள்ளது. அமைதியான நெறியைப் பின்பற்றிய அவ்வரலாற்றினை, அனைத்துலக மக்களும் ஒரு வழிகாட்டியெனக் கொள்ளலாம். இன்பத் தமிழகத்திலே வாழ்ந்த அன்புத் தமிழர்கள், மொழியாலும் பண்பாலும் அழியாத உறவு பூண்டு வாழ்ந்தார்கள். ஒரு தாய் வயிற்றிலே பிறந்த செம்மல் செங்குட்டுவனும் இளவல் இளங்கோவடிகளும், முறையே சைவனாகவும் சமணராகவும் வாழ்ந்தனரென அறிகிறோம். சிலம்புச் செல்வம் தந்த அவ்விளங்கோவுடன், மணிமேகலைக் காப்பியம் தந்த பௌத்தராகிய சாத்தனார், ஆராத நட்பினால் ஆர்க்கப்பட்டிருந்தார்.

பொற்சைவ வைணவமும்
புத்தபிரான் பொன்னுரையும்
நற்சமண கிருத்துவமும்
நபிகள்பிரான் நல்லுரையும்

பற்பலவா யிருந்திடினும்
　　பைந்தமிழின் பண்பேற்றுக்
கற்போரைப் பிடித்திழுத்துக்
　　கனிதமிழின் சுவையூட்டி
நாயன்மார் நாவமுதும்
　　நல்லாழ்வார் பாசுரமும்
மேயபுகழ் மேகலையும்
　　மேம்படுசிந் தாமணியும்
மாமுனிதேம் பாவணியும்
　　மாண்பேறு சீருவும்
காமுறவே எல்லோரும்
　　கண்ணாரக் கண்டோதும்
காவியமாய் இந்நாட்டில்
　　கதிர்வீசக் காண்கின்ருேம் !

'யாதும் ஊரே; யாவரும் கேளிர் !' என்னும் பண்பாடு விளைத்த பயன் இதுதான். அப்பண்பாட்டை வளர்த்த பரம்பரையிலே வந்த கன்னித் தமிழ்க் காவலர்கள் கடமையுணர்ந்து வாழ்தல் வேண்டும். வாழ்க செந்தமிழ் !

---

## 2. கவிஞன் நோக்கில் வையகப் பரிவு

செல்வத்துட்செல்வம், செவிச்செல்வம் ; அச்செல் வத்தினுயிர் கவிச்செல்வம். புவிச்செல்வம் பெற்ற பெரு வேந்தர்கள் கவிச் செல்வர்களின் கருணையினாலேயே இன்றும் உலகில் வாழ்கிறார்கள். 'செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொருளில் சீரிய, கூரிய தீஞ்சொல் வவ்விய' கவிஞர்களே ஒரு நாட்டின் நிலையான புகழுக்குக் காரண மாவார்கள். கவிதைக் கன்னியின் அருட்பார்வைக்கு ஒருவன் ஆளாகிவிட்டால், என்றும் பொன்றாப் புகழுடன் மக்கள் மனங்களிலே மங்காத இடம் பெற்றுவிடுவான். 'ஆடையின்றி வாடையின் மெலிந்து, கையது கொண்டு மெய்யது பொத்திக் காலதுகொண்டு மேலது தழீஇப் பேழையுள்ளிருக்கும் பாம்பென உயிர்க்கும் ஏழையாளன்,' என்றும் நல்லறிஞர் நாக்களில் நிலைத்துவிடுகிறான் ; உலகத்தார் நெஞ்சுகளிலெல்லாம் உயிர் வாழ்கிறான். கண்ணையிழந்தவர்களும், காலையிழந்தவர்களும், நோயால் உழந்தவர்களும் இலக்கிய வானின் இணையறு மீன்களாக இலங்குகிறார்கள். தெருத்தெருவாய் அலைந்து தெவிட் டாத கவிதைத் தேனை வாரியிறைத்துப் பிச்சையெடுத்து வாழ்ந்த ஹோமரின் 'இலியட்', இன்று உலகப் பெருங் காவியமெனப் போற்றப்படுகின்றது. ஆங்கிலப் புலவர் கோல்ட்ஸ்மித்து என்பார் கடன் தொல்லையால் ஏழு நாட் கள் சிறையிலே சிக்கிக் கிடந்தார். "எருசலத்தின் வீழ்ச்சி" யென்னும் எழிலார் நூலளித்த இத்தாலியப் பெருங் கவிஞர் தாஸ்ஸோ என்பார், மெழுகுவர்த்தி வாங்கக்

காசில்லாது, தமது பூனையின் கண்ணொளியின் துணை யினால் கவிதை எழுதினாராம்! மிடிமைச் சுழியிலே சிக்கித் தவித்த இவர்களனைவரும், இன்று சிறப்புடன் நின் றிலங்கக் காரணம், இவர்கள் வாழ்வினையும், வாழ்விற் கண்ட பொருள்களையும் நோக்கிய நோக்கேயாகும்.

கவிஞன் நோக்கு ஏனையோர் நோக்குகளினின்றும் பெரிதும் வேறுபட்டது. நல்லின்பம் பொழிவதற்கு நகைத்து வரும் தண்சுடரும், வல்லிருளைக் கவ்வுதற்கு வந்துதிக்கும் வெஞ்சுடரும், இனிய மலரும் கனியுமுதவும் இன்தருவும் செடி கொடியும், மணம் விரவி உடல் தழுவி மனங்கவரும் மாருதமும், விலை குறையாப் பொருளளிக் கும் நிலைகுலையா மாமலையும், மலைமகளின் தொங்கலைப் போல் வழிந்தோடும் அருவிகளும், அலைக்கரத்தால் நிலம் வருடும் ஆழ்கடலும், வான்வெளியும், பச்சைப் படாம் போர்த்தது போன்ற பசும்புற்றரையும் பலருக்கும் மன மகிழ்வையூட்டலாம். ஆனால், அவற்றின் அழகைக் கவிஞன் நோக்குகின்ற முறையே வேறுதான். காலைக் கதிரவனைக் காண்கின்ற கவிஞன், 'புல்லை நகையுறுத்தி, பூவை வியப்பாக்கி, மண்ணைத் தெளிவாக்கி, நீரில் மலர்ச்சி தந்து, விண்ணை வெளியாக்கி விந்தைசெயும் சோதி'யிலே சொக்கிவிடுகிறான்; மூங்கிலிலை மேலே தூங்கும் பனிநீரை இமை கொட்டாமல் நோக்கி வியந்து நிற்கிறான். வானவில்லைக் கண்டதும் அவனுள்ளம் துள்ளுகிறது. குயிலின் குரலைக் கேட்டதும் அவனிதயம் இளகி ஓடுகிறது. உலகத்தார் வியந்து போற்றும் தாஜ் மகாலைக் கண்டால் 'காலத்தின் கன்னத்திலே அது ஒரு துளிக் கண்ணீர்!' என இரங்குகின்றான்.

ஒரே மலர், ஒரே நேரத்தில், பார்க்கின்ற பலரின் நோக்கினையொட்டிப் பல நினைவுகளை எழுப்பக் காண்கிறோம். வணிகனொருவன் ஊதியநோக்குடன் அதனைப் பார்க்கிறான். தாவரநூல் வல்லான் அதனை இதழிதழாகப் பிரித்தெடுத்து ஆராய்கிறான். காதலனுக்கு அம்மலர், கனிமொழியாளின் கருங்கூந்தலை நினைவுபடுத்துகிறது. பத்தனோ, 'பார்க்கின்ற மலரூடு நீயேயிருத்தி; அப்பனிமலரெடுக்க மனமும் நண்ணேன்!' என இதழ்களினுள் இறையைக் காண்கிறான். ஆனால், அம்மலர் விலங்கின் கைப்பட்டால் 'குரங்கின் கைப் பூமாலை' என்பது போலச் சிதைந்து சீரழிகிறது. கவிஞனும் அதே மலரைக் காண்கிறான். அவனது நோக்கு எத்தனையோ காட்சிகளைக் காண்கிறது. ஆங்கிலக் கவிஞன் வேர்ட்ஸ்வொர்த்து, பொன்னிற மலர்கள் தென்றலிலாடும் இன்பக் காட்சியை இமை கொட்டாமல் பார்த்துவிட்டு, அக்காட்சி ஓய்வு நேரங்களில் உள்ளத்தெழுப்பும் வற்றாத உவகையை வளமார் கவிதைத் தேனாய் வடித்துத் தருகின்றான். மலையாளப் பெருங்கவிஞன் குமாரனாசான் வீழ்ந்த மலரொன்றிற்காகக் கண் கசிந்து பாடிய கவிதை, மலையாள இலக்கியத்தில் நெஞ்சையள்ளும் செஞ்சொல்லோவியமாக நின்றொளிர்கிறது. மலர்க்கொடியாள் ஈன்றெடுக்கத் தளிர்த் தொட்டிலிலே தென்றற்செவிலி தாலாட்ட வளர்ந்து, அரசியாய்த் திகழ்ந்த அம்மலர், வாடி வீழ்ந்து புழுதி புரளக்கிடப்பது அக்கவிஞன் உள்ளத்தையே கலக்கிவிடுகிறது! உர்தூப் பெருங்கவிஞர் அல்லாமா இக்பால், சோலைமலர்கள் தென்றலிலே ஆடுவதைக்கண்டு உள்ளம் வருந்துகின்றார். "தென்றலில் ஓரிதழ் அசைந்

தாலும் அது என் இதயத்தே எதிரொலித்துக் கண்ணீர்த் துளியாய் வெளி வருகிறது!'' எனப் பாடுகிறார். மலர் களைக் கசக்கிப் பிழிந்த உதிரம் என்னும் காரணத்துக்காக ஒரு மராட்டியப் புலவன் பன்னீரைத் தீண்டாது வாழ் கிறான்.

தமிழ்க் கவிஞர்களின் வாழ்வனைத்தும் மலர் மணமே நிறைந்திருக்கக் காண்கிறோம், குறிஞ்சி, முல்லை போன்ற அகத்திணைகளும்; வெட்சி, வஞ்சி போன்ற புறத்திணை களும்; பனம்பூ, வேப்பம்பூப் போன்ற மூவேந்தர் சின்னங் களும்; அசோகு, தாமரைபோன்ற அநங்கன் கணைகளும்; குவளைக் கண், குமுத வாய் போன்ற உவமைகளும் இவ் வுண்மையை விளக்குவன. இற்றை நாள் தமிழ்க் கவிஞன் ஒரு தாமரை மலரைப் பார்க்கின்றான்; பாடுகின்றான்: 'ஓரிதழ் குழந்தைக் கன்னம்; ஓரிதழ் விழியை யொக்கும்; ஓரிதழ் தன் மணாளன் உருவினைக் கண்டு கண்டு பூரிக்கும் உதடு; மற்றும் ஓரிதழ் பொல்லார் நெஞ்சம்; வாரித் தரச் சிவந்த உள்ளங்கையாம் மற்றொன்று.'

பல்வேறு கோணங்களிலிருந்து நோக்குகின்றவர்க்கு ஒரு மலர் எத்தகைய எண்ணங்களை எழுப்புகின்றதென் பதையும், கவிஞன் நோக்கு ஏனையோர் நோக்குகளினின் றும் எவ்வாறு வேறுபட்டதென்பதையும் கண்டோம். எந்நாட்டுக் கவிஞனாயினும், எக்காலத்துக் கவிஞனாயினும், அவனது பார்வையிலே ஒரு பரிவைக் காண்கிறோம். வையகத்து மக்களுக்காக, உயிருருக, உளமுருக, மெய் யுருக, வாயுருகப் பாடுகின்ற இயல்பு, கவிஞன் நோக்கின் கவினார் பெருமையாய் அமைந்துவிட்டது. இதுவே வையகப் பரிவு.

வையகமெல்லாம் பசியும் பிணியுமற்று, வசியும் வளனும் சுரந்து, எல்லா எழிலும் சிறந்தோங்க வேண்டுமென்பதில், உலகின் ஒவ்வொரு பகுதியிலும் வாழ்ந்த கவிஞர் பலரும் உலேயாத ஆர்வம் பூண்டிருந்தனர். இடம், காலம் என்னும் கட்டுப்பாடுகளைக் கடந்தும், மனித குலம் என்னும் எல்லையைத் தாண்டியும், கவிஞர்களின் இவ்வார்வம் தங்கு தடையின்றிப் பள்ளத்துட் பாயும் வெள்ளம் போலச் சென்று பரந்து இன்பப் பூங்காக்களை எழுப்பிற்று. சிறப்பாகச் செந்தமிழ் நாட்டில் இப்பண்பு சங்க காலம் முதற்கொண்டு பொங்கி வழிகிறது. நேர்மையை மறந்து, நீதியைப் புறக்கணித்து, வேந்தர்கள் ஒருவரோடொருவர் முட்டி மோதவிருக்கும் தருணங்களில், வருந்துகின்ற மக்களுக்காகப் பரிந்து பேசிய பைந்தமிழ்ப் பாவாணர் பற்பலராவர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் கருவூரை முற்றுகையிட்டிருக்கின்றான். கருவூர் வேந்தனே, கடிமரம் தடியும் ஓசையைக் காதாற் கேட்டும் வாளாவிருக்கிறான். 'இவ்வேந்தனோடு போரிடுதல் நாணுதற்குரியது!' என்று கிள்ளி வளவனுக்கு முன்னால், கொஞ்சமும் அஞ்சாமல் கூறுகிறார் ஆலத்தூர்கிழார். மாரி ஈகை மறப்போர் மலையனெனக் கடையெழு வள்ளல்களின் வரிசையிலே கவின் பெற்றிலங்கும் மலையமான் திருமுடிக்காரியின் பிஞ்சிள மைந்தர்களைக் கிள்ளிவளவன், பகைமை காரணமாக யானைக்காலில் இடறிக்கொல்லவிருக்கிறான். இச்செய்தியைச் செவிமடுத்த கோவூர் கிழார், சிறுத்தை போலச் சீறிச்சென்று, மன்னனின் மரபினையும் வள்ளலின் வண்மையையும் விளக்கிக்கூறி, சிறுவர்களைக் காக்கின்றார்; இதுபோன்றே, இளந்தத்தனர் என்

னும் புலவரை ஒற்றனென்று நினைத்துக் குற்றம் சாட்டிக் கொல்லத் துணிந்த காரியாற்றுத் துஞ்சிய நெடுங் கிள்ளிக்குப் பிறர்க்குத் தீதறியாப் பரிசில் வாழ்க்கையின் பண்பினை விளக்கிக் காட்டி விடுதலை வழங்குகிறார். பெருங்கல் நாடன் பேகன் என்னும் வள்ளல், கற்பும் பொற்பும் செறிந்த தன் இல்லறத்துணைவியாம் கண்ணகியைப் பிரிந்து வாழ்ந்த ஞான்று, கபிலரும், பரணரும், அரிசில் கிழாரும், பெருங்குன்றூர் கிழாரும் தாம் பரிசில் பெறுவதைவிடக் கண்ணகியின் கண்ணீரை மாற்றுவதையே கடனெனக்கொண்டு, பேகனைத் திருத்திய பெருமையைப் பெறுகின்றனர். இவ்வாறு, தாம் மட்டும் வாழாது, உலகத்தையும் வாழ்விக்க வேண்டும் என்ற கருத்துடன் வாழ்ந்த உயர்பெருங்கவிஞர்கள், வள்ளல்களிடமிருந்து பெரும்பரிசில்களைப் பெற்றவிடத்து, அவற்றைத் தமக்கே பயன்படுத்திக்கொள்ளாது, எல்லோருக்கும் வாரி வழங்குவது பொருத்தமானதேயாகும்.

தமிழ்ப்பெருங்காப்பியங்களின் தொடக்கத்தில் நாம் கண்ணுறும் நாட்டு வளமும், நகர் வளமும், கவிஞர்தம் வையகப் பரிவின் வளமுறு சின்னங்கள் எனக் கூறலாம். கம்பர் காட்டுகின்ற கோசலமும், திருத்தக்க தேவர் காட்டுகின்ற ஏமாங்கதமும், வில்லியார் விளக்குகின்ற குருபாஞ்சாலமும், வீரமாமுனிவர் விளக்குகின்ற யூதேய நாடும், உமறுப் புலவர் உரைக்கின்ற அரபு நாடும், அவ்வந்நாட்டு வளங்களைக் காட்டுகின்றனவெனக் கொள்ளுதல் பொருந்தாது; அவையனைத்தும் கவிஞர் பெருமக்களின் கற்பனையிலே முகிழ்த்த குறிக்கோளுல

கெனக் கொள்வதே பொருந்துவதாகும். வண்மையும், திண்மையும், உண்மையும், வெண்மையும் இல்லாத நாட்டையும், எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்த லால் இல்லாரும் உடையாரும் இல்லாத நகரத்தையும், கவிச்சுவையுடன் கவிஞன் விளக்கிக் கூறும்போது, வையகப் பரிவுடன் அவன் கண்ட கனவுலகமே செஞ் சொல்லோவியமாய் வெளி வருகின்றதென மதிப்பிடுதல் வேண்டும்.

மதுரையம்பதியில் இறை முறை பிழைத்த பாண்டி யன் நெடுஞ்செழியனல், ஏசாச் சிறப்பின் மாசாத்துவான் புதல்வன் கொலேயுண்ணவிருக்கும் கொடிய நிகழ்ச்சியை யும், அதன் விளேவாகக் கற்பின் கொழுந்து கண்ணகி யடையவிருக்கும் துன்பத்தையும் கூறுவதற்கு முன்பே, இளங்கோவடிகளின் அருளுள்ளம் அலே மோதுகின்றது. 'கோவலன் கொலேயுண்டான்!' என்னும் செய்தியைச் செவிமடுக்கும் ஆற்றலேப் படிப்பவர்களும் பெறவேண்டும். அதற்குப் பொருந்திய முறையில் கோவலனும் கண்ணகி யும் மதுரைமா நகரை அணுகுகின்ற போதே, கவிஞனின் பரிவு கனிந்தொழுகத் தொடங்கிவிடுகிறது. 'பாம்பறியும் பாம்பின கால்' என்பதைப்போல, பெண்கள்தாமே பெண்களின் துன்பங்களே உணரமுடியும்! புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி, வையையென்னும் பொய்யாக் குலக்கொடியும் ஒரு பெண் கொடிதானே! ஆகவே, அவள் கண்ணகிக்கு நேரவிருக்கும் துயரத்தை முற்கூட் டியே அறிந்தவளேப்போல, கவலே காரணமாகத் தோன் றிய கண்ணீராகிய தண்ணீரையெல்லாம் மறைத்துக் கொள்வதற்காக, நறிய மலராடையால் மெய்யினேப்

போர்த்திச் செல்கின்ருள். அது மட்டுமா? இயற்கை யனைத்துமே இருவருக்காகவும் வருந்துகின்றது. கோட்டையின்மீது கட்டப்பட்டிருக்கின்ற கொடிகள் காற்றிலே அசைகின்ற காட்சி, கோவலனை நோக்கி, 'இங்கு வாராதே; போ!' என்று கை காட்டுவதைப்போலக் கவிஞர் கண்ணுக்குத் தோன்றுகின்றது. பின்னர், ஆயர் முதுமகள் மாதரி வீட்டில் கோவலனுக்கு அமுதூட்டுமுன்பு, கண்ணகி நிலத்திலே நீர் தெளிக்கின்ற காட்சி, மண்ணக மடந்தையை மயக்கொழிப்பது போல அமைந்தது.

இன்று அறிவியற்கலையின் வளர்ச்சியினுல், நானிலத்தின் நாடுகளெல்லாம் தொலைவினை வென்று நெருங்கி வாழ்கின்ற நிலையினைப் பெற்றிருக்கின்றன. உள் நாட்டு நிகழ்ச்சிகளும், வெளி நாட்டு நிகழ்ச்சிகளும் கவிஞர்களின் உள்ளங்களை விரைவாகக் கௌவிப் பிடிக்கக் காண்கிறோம். அறியாமையிருளிலே ஆழ்ந்து அடிமைத் தளையிற்சிக்குண்டு தவித்த தமது நாட்டையும், பிற நாடுகளையும் குறித்துப் பைந்தமிழ்ச் சாரதியாராம் பாரதியார் பாடிய கவிதைகள் பலப்பல. இன்னுயிர் தந்து, நமையீன்று வளர்த்து அருள்தந்த நாடு—அன்னையர் தோன்றி, மழலைகள் கூறி அறிந்த நாடு—அவர் கன்னியராகி, நிலவினிலாடிக் களித்த நாடு—பொன்னுடல் இன்புற நீர் விளையாடி இல்போந்த நாடு—உரிமையற்று உழல்வதை உணர்ச்சி ததும்ப விளக்கிக்காட்டினுர் பாரதியார்.

'வீரசு தந்திரம் வேண்டி நின் ருர்பின்னர்
வேறொன்று கொள்வாரோ? என்றும்
ஆரமு துண்ணுதற்கு ஆசைகொண் டார்கள்ளில்
அறிவைச் செலுத்துவாரோ?'

எனச் சுதந்தரத்தின் பெருமையை உணர்த்தித் தூங்கிக் கிடந்த உள்ளங்களைத் துள்ளியெழச் செய்தார்; பிஜித் தீவின் கரும்புத் தோட்டங்களிலே இந்தியப் பெண்கள், கால்களும் கைகளும் சோர்ந்து விழும்படி வருந்துவதையும், நெஞ்சங்கொதித்துக் கொதித்து மெய் சுருங்குவதையும் காதைச்சுடும் கவிதைகளாகப் பாடினார். இத்தாலி நாட்டு மாஜினி 'வாலிப இத்தாலி' என்னும் சங்கத்திலேயுரைத்த ஒருரையைக் கேட்டதும், பாரதியார் பரிவு நாட்டெல்லையையும் தாண்டிச் சென்றது. 'இம் மென்றால் சிறைவாசம்; ஏனென்றால் வனவாசம்' என்னும் முறையில் ருஷ்ய நாட்டையாண்ட ஜாரின் வீழ்ச்சியைக் கேட்டதும் அவர் மகிழ்ச்சியால் துள்ளினார்.

சமுதாயக் கட்டுப்பாடுகளால் அடக்கியொடுக்கப் படுகின்ற மக்களின் நிலைக்காக வருந்தினார், பாரதியார். அவர்களின் நல்வாழ்வுக்கு வழி காட்டுகின்ற நற்கருத்துக்கள், பாரதியாரின் கவிதைகளிலே பரந்து கிடக்கின்றன. சிப்பாயைக் கண்டஞ்சியும், துப்பாக்கியைக் கண்டு வீட்டிலொளித்தும், அப்பால் செல்வோனின் ஆடையைக் கண்டு பயந்தும், எப்போதும் கைகட்டிப் பூனைகள்போல ஏங்கி நடக்கும் பாரத மக்களின் நிலையைக் கண்டு,

'நெஞ்சு பொறுக்குதில்லையே!—இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்!'

என உருகி நின்றார். இப்பரிவு மக்கள் குலத்தோடு மட்டும் நின்றுவிடவில்லை. வாயில்லாப் பறவைகளும் விலங்குகளும், உயிரில்லாக் கல்லும் புல்லும் கவிஞரின் கருணைக்கு ஆளாகின்றன.

'காக்கை குருவி எங்கள் சாதி—உயர்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்'

என்னும் பாரதியாரின் பாடலும்,

'ஈயும் எனக்குத் தோழன்—ஊரும்
எறும்பும் எனக்கு நேசன்;
நாயும் எனக்குத் தோழன்—குள்ள
நரியும் எனக்கு நண்பன்'

என்னும் கவிமணியின் கவிதையும், நமது கருத்துக்கு விருந்தளிப்பன. இவ்வாறு மனித சமூகத்தின் எல்லையைத் தாண்டி, எல்லாப் பொருள்களுடனும் உறவு கொண்டாடுதல் கவிஞனுக்கே உரிய தனிப் பெருமை. சின்னஞ்சிறு குருவியும், கன்னங்கரிய காக்கையும் கண்ணெதிரே வீற்றிருந்து பேசும் பேச்சைக் கவிஞனே புரிந்துகொள்கிறான். கவர்ச்சியற்ற கருமை நிறம் வாய்ந்த காக்கையிடத்துக் கவிஞன் காண்கின்ற காட்சி எத்துணை உயரியது! கரிய செம்மலாம் கண்ணனின் தோற்றத்தையன்றோ காக்கைச் சிறகு காட்டி நிற்கிறது! மரங்களெல்லாம் அவன் பச்சை நிறத்தையன்றோ கொண்டு நிற்கின்றன! தொட்டால் சுட்டெரிக்கின்ற நெருப்புங்கூட நந்தலாலாவைத் தீண்டுகின்ற இன்பத்தையன்றோ அளிக்கிறது!

'காக்கைச் சிறகினிலே நந்த லாலா—நின்றன்
கரிய நிறம் தோன்றுதையே நந்த லாலா
பார்க்கும் மரங்களெல்லாம் நந்த லாலா—நின்றன்
பச்சை நிறம் தோன்றுதையே நந்த லாலா
கேட்கும் ஒலியிலெல்லாம் நந்த லாலா—நின்றன்
கீத மிசைக்குதடா நந்த லாலா
தீக்குள் விரலைவைத்தால் நந்த லாலா—நின்னைத்
தீண்டுமின்பம் தோன்றுதடா நந்த லாலா!'

கவிமணியவர்களின் பாடல்களில் இவ்வையகப் பரிவு, வற்ருத ஊற்ருய்ச் சுரந்தூறுவதைக் காணலாம். அவர், கல்லின் கதைகளெல்லாம் இரு காது குளிரக் கேட்பார் ; புல்லின் பேச்சுமறிவார் ; அதைப் புராணமாக விரிப்பார். வண்டியும், வண்டி மாடும், வண்டி பூட்டு கின்ற கயிறும், வண்டல் கிண்டி உழுவோனும் அவ ருக்கு அற்புதப் பொருள்கள். பெண்ணினத்தின் உயர் வுக்காகக் கனிவுடன் பரிந்து பேசும் முறை, கவிமணியின் கவிதைகளுக்கே ஒரு தனிச் சிறப்பளிக்கிறது. அல்லும் பகலும் உழைத்து, உள்ளத்தன்பு ததும்ப எழுந்து, கல்லும் கனியக் கசிந்துருகி, ஊக்கமுடைந்தழும் ஏழை களுக்காக உள்ளம் உருகித் துடித்து, நோயாளியைக் காக்க அண்டையிலேயே அகலாதிருந்து, அன்பினுக் காகவே வாழ்ந்து, அன்பில் ஆவியைப் போக்கத் துணி கின்ற பெண்களை, உலகத்துக் கற்பகத் தருக்களெனப் பாராட்டி,

'மங்கைய ராகப் பிறப்பதற் கேநல்ல
மாதவம் செய்திட வேண்டும்.'

என்கிருர். என்னே வையகப்பரிவு! காண்கின்ற காட்சிகளை யெல்லாம், இவ்வாறு பரிவுடனே நோக்குகின்ற இயல்பு, எல்லா நாட்டுக் கவிஞர்களிடத்திலும் அமைந்துள்ள தெனினும், அதைக் கூறுகின்ற முறையிலே தமிழ்க் கவிஞர்களிடத்து ஒரு தனிச் சிறப்பைப் பார்க்கலாம். தமிழ்க் கவிஞர்கள் தாங்கள் கண்டறிந்த உண்மைகளைத் தமிழகத்திற்கு மட்டும் சொல்லாது அனைத்துலகுக்கும் வாரி வழங்குகின்ற ஒரு சீரிய இயல்பு, சிறந்த பெரு நூல்களின் முதற்செய்யுட்களிலெல்லாம் அணி பெற அமைந்துள்ளது.

# 3. இலக்கியம் காட்டும் எழிலரசிகள்

"காலையிளம் பரிதியிலே அவளைக் கண்டேன் ;
கடற்பரப்பில், ஒளிப்புனலில் கண்டேன்; அந்தச்
சோலையிலே, மலர்களிலே, தளிர்கள் தம்மில்,
தொட்டவிட மெலாம்கண்ணில் தட்டுப் பட்டாள்;
மாலையிலே மேற்றிசையில் இலகு கின்ற
மாணிக்கச் சுடரிலவள் இருந்தாள் ; ஆலஞ்
சாலையிலே கிளைதோறும் கிளியின் கூட்டந்
தனிலந்த அழகென்பாள் கவிதை தந்தாள்.'

கவிஞன் இவ்வாறு தான் காண்கின்ற பொருள்களிலெல்லாம் அழகைச் சுவைத்து இன்புறுகின்ருன். தான் பெற்ற இன்பத்தைக் கவிதைத் தேனிலே வடித்தெடுத்து வையகமெல்லாம் வாரியிறைக்கின்ருன். இவ்வாறு காண்கின்ற பொருள்களினுள் நுழைந்து அழகை நுகர்வதும், நுகர்ந்த அழகை அழியாமற் காப்பதுந்தான் கலையின் உயிர் நிலையாகக் கருதப்பட்டு வருகின்றது. எல்லா நாடுகளிலும், எல்லா மொழிகளிலும், எல்லாக் காலங்களிலும் வாழ்ந்த சொல்லேருழவர் இப்பணியைத்தான் தத்தம் இயல்புக்கேற்றவாறு இனிதே செய்து போயினர்.

கவிஞர்களின் நோக்கும் வாக்கும் மிக நுட்பமானவை; சாதாரண மக்களின் நோக்கினின்றும் வாக்கினின்றும் பெரிதும் மாறுபட்டவை. கவிஞர்கள் அழகிய மலரைப் பார்த்து அகமகிழ்வதோடு மட்டுமன்றி, கல்லை

யும் கவி பாடச் செய்வார்கள்; புல்லையும் புகழ் வீசச் செய்வார்கள். அவர்கள் இழிந்த பொருள்களைக்கூட இன்ப ஊற்ருக மாற்றும் ஆற்றல் பெற்றவர்கள். ஆங்கிலக் கவிஞன் வேர்ட்ஸ்வொர்த்து (Wordsworth) வான வில்லைக் கண்டபோது வற்ருத இன்பங் கொண்டான். இளங் கவிஞன் கீட்ஸ், நைட்டிங்கேல் என்ற பறவையின் குரலைக் கேட்டுப் பரவசமடைந்தான். வானத்தின் முகில் புரட்சிக் கவிஞன் ஷெல்லி என்ற செஞ்சொல்லோவியனுக்கு அழியாத புகழை அளித்தது. 'வீழ்ந்த பூ' மலையாளக் கவிஞன் குமாரனுசானை மகா கவியாக மாற்றியது. வசந்த காலத்தின் வருகை உர்தூப் பெருங்கவிஞர் அல்லாமா இக்பாலின் உள்ளத்தைத் துள்ளச் செய்தது. கன்னங்கரிய காக்கை, மக்கட்கவிஞர் பாரதியாரின் உள்ளத்திற்குக் கண்ணனைக் காட்டியது. பறக்கும் குருவியும், பால் சுரக்கும் பசுவும் கவிமணியவர்களின் உள்ளத்தைக் கனிவித்தன.

இயற்கையின் இன்பக் காட்சியிலே புலவர்கள் காண்கின்ற மகிழ்ச்சி மட்டற்றது. இயற்கையின் அழகிலே ஈடுபடாத கவிஞரே இலரென்னலாம். சங்க காலத்திலே வாழ்ந்த கவிஞர், அவ்வியற்கையோடு இரண்டறக் கலந்து இன்ப வாழ்வு நடத்தினர். அவர்தம் செய்யுட்களனைத்தும் இயற்கையழகின் இணையற்ற ஓவியங்களெனலாம். எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும், கற்போர் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளும் அழகிய காட்சிகளைப் பெற்றுத் திகழக் காண்கிறோம். மணிமேகலை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனுர் ஒரு சோலையைப் பார்க்கின்ருர். மதுரை மாநகரில் பாண்டியன் அவைக்களத்திலிருந்து பழகிய அவருக்குச் சோலையும் மன்னனின் அவைக்களமாய் மாறிவிடுகிறது. காய்கதிர்ச் செல்வனின்

கடுஞ்சுடர் நுழையாமல் தண்ணிழல் வீசும் ஒரு நறுஞ் சோலை. சோலைக்குள்ளே தும்பிகள் குழலூதுகின்றன. வண்டுகள் யாழ் மீட்டுகின்றன. நிலத்திலே காதல் மயி லாள் களிநடம் புரிகின்ருள். அந்நாட்டியத்திற்கு முழவு ஒலியைத் தருகின்றது, கம்பங்கோழிகளின் கனத்த குரல். பாட்டு வேண்டுமல்லவா? அதோ குயிலாள் மரக் கிளையிலிருந்து குரல் கொடுக்கிருள்! இந்தச் சிறப்பெல் லாம் யாருக்காக? கண்ணுடி போலத் தெளிந்த குளம், பக்கத்திலே உள்ளது. அதனுள், பச்சைப்பசேலென்னும் இலைகளினூடே, ஒரு பெருந்தாமரை மலர், ஏனைய செந் தாமரை மலர்களின் நடுவண், ஒரு சிறந்த மலரணையாகப் பூத்துள்ளது அவ்வணையின்மீது ஓர் அரசனைப் போன்று பெருமிதத்துடன் அமர்ந்திருக்கிறது, ஓர் அன்னம். காட்டிலே நடைபெறும் இந்நாட்டியத்தைக் காண்போ ரும், பொருத்தமாக அமைந்துவிடுகின்றனர். இங்கு மங்கும் மந்திகள் குந்தியிருந்து கூர்ந்து நோக்குகின்றன.

இது போன்றே, சோழனது அவைக்களத்திலே பழ கிய கம்பரின் கண்கள், மருதநிலத்தே இத்தகைய அரங் கொன்றைக் கண்டு மகிழ்கின்றன. தாமரை மலர்கள் விளக்கேந்தியது போலவும், குளத்தின் அலைகள் மாறி மாறி விழும் திரைகளைப் போலவும், மேகங்களின் குமுறல் முழவினைப் போலவும், வண்டுகளின் ஒலி மகர யாழினைப் போலவும் அமைந்திருக்கச் சோலைகளில் மயில்களாடு கின்ற நடனத்தைக் குவளை மலர்கள் வியந்து நோக்கு கின்றனவாம். இன்றும் அதே மருதத்தையும், அதே சோலையையுந்தான் கவிஞன் காண்கின்ருன். ஆனல், இன்று அவன் கண்கள், அதில் களியாட்டத்தைக் காண முடியவில்லை; மாருக, அச்சோலையை ஆக்குவதற்கு

அரும்பாடு பட்ட கரங்களின் கடுமுயற்சியைக் கற்பனை செய்கின்றன.

'சித்திரச் சோலைகளே! உமை நன்கு
திருத்தஇப் பாரினிலே
எத்தனை தோழர்கள் இரத்தம் சொரிந்தனர்
உந்தம் வேரினிலே!'

என உள்ளம் நெகிழ உரைக்கின்றான்.

சூழ்நிலைக்கேற்ப, இயற்கையின் எழிலைக் கண்டு இதயங்குளிர்ந்த பாவலர், மங்கையர் எழிலையும் மனமாரப் போற்றியுள்ளனர். சங்க காலம் முதற்கொண்டு இந்நாள் வரையிலே, பல்வேறு காலங்களிலே வாழ்ந்த பைந்தமிழ்ப் பாவாணர், இவ்வழகினை எவ்வாறு கண்டுள்ளன ரென்பதை ஆராய்தல், காலத்தின் இயல்பையும், கற்பனையின் வேறுபாடுகளையும் விளக்கமுறக் காட்டும். அழகரசிகளைத் தேர்ந்தெடுப்பதற்காக ஆண்டுதோறும் நடைபெற்று வருகின்ற அழகுப் போட்டியைக் குறித்து நாம் நன்கறிவோம். அப்போட்டியினைக் காணும் வாய்ப்பினை எல்லோரும் எளிதிற்பெற இயலாது. ஆனால், இலக்கியம் காட்டும் அழகரசிகளை எல்லோரும் எப்போதும் கண்டு களிக்கலாம். அவ்வாறு நற்றமிழ்ப் புலவோர் நடத்திக் காட்டுகின்ற ஒரு போட்டியைப் பார்த்து வருவோம்:

முதன்முதலாகத் தெள்ளுதமிழ் வள்ளுவப் பெருந்தகை, ஓரழகியை அரங்கிற்கு அறிமுகம் செய்துவைக்கிறார்; தலைவியினழகைத் தலைவன் வாய்மொழியாகக் கூறுவதே

பொருத்தமுடையதெனக் கருதுகின்றார். மாலை நன் னேரம், மகிழ்வு பூக்கும் ஒரு சோலையிலே, தங்கப் பதுமை போன்ற மங்கையொருத்தியைக் காண்கின்றான், ஓர் ஆணழகன். அவளழகு அவனைவியப்பிலே ஆழ்த்துகிறது. 'தேவமகள் இவள் யார்?' என்று பாடத் தொடங்கு கின்றான்; அவளை அடிமுதல் முடிவரைக் கூர்ந்து நோக்குகின்றான்; அவள் பாதம் நிலத்திலே தோய்ந் திருக்கக் காண்கின்றான். கண்களும் குறிப்புணர்த்தி இமைக்கின்றன. ஆகவே, அவள் விண்ணுலக மடந்தை யல்லளெனத் தெளிந்தான்; சோலையிலே காணப்படுவது காரணமாக அவளோர் ஆராய்ந்தெடுக்கப்பட்ட மயில் விசேடமோவென அடுத்தபடியாக நினைக்கின்றான். அவள் காதிலே தொங்குகின்ற குண்டலங்கள் அவ் வெண்ணத்தையும் மாற்றிவிடுகின்றன. இறுதியில், அவள் மண்ணுலக மடந்தையே என்னும் முடிவுக்கு வருகின்றான். எனினும், ஓர் ஐயம் அவன் மனத்தைக் குழப்புகின்றது. இதோ அக்குறட்பா:

'அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு!'

மூவகை எண்ணங்களால் குழப்பமடைந்த தலைவனது மன நிலையை ஈரடிகளில் வடித்தெடுத்துக் காட்டுகின்ற வள்ளுவர் வாழ்க!

பத்துப் பாட்டுள் ஒன்றாகிய பொருநராற்றுப்படை இரண்டாமழகியைக் காட்டுகின்றது. ஆசிரியர் முடத் தாமக் கண்ணியார், அழகியின் ஒவ்வோருறுப்பிற்கும் இயற்கைப் பொருள்களை உவமித்துக் காட்டுகின்றார்.

கருமணல் போன்ற கூந்தல்; மூன்றும் பிறையினையொத்த நெற்றி; கொலைத் தொழில் புரியும் வில்லினையொத்த புருவம்; இலவின் இதழ்களை நினைவூட்டும் இனிய மொழி யமுதைப் பொழியும் வாய்; அதனுள் வரிசையாக அமைந்த முத்தையொத்த பற்கள்; கத்தரிக்கோலின் கைப்பிடியையொத்த காது; வெட்கம் தாக்குவதால் சற்றே சரிந்த அழகிய கழுத்து; மூங்கிலையொத்து மென்மை யாய்ப் பருத்த தோள்கள்; மெல்லிய மயிர் வரிசைகளை யுடைய முழங்கை; உயர்ந்த மலையுச்சியிலே மலர்கின்ற காந்தட்பூவையொத்த கைவிரல்கள்; அவ்விரல்களில் கிளி யலகைப்போல வளைந்த நகங்கள்—இவ்வாறு தொடர்ந்து முடி முதல் அடிவரைச் செல்கின்றது அச்செஞ்சொல் ஓவியம்.

மூன்றுவதாக, ஒரு துறவியார் காட்டுகின்ற அழகி யினைக் காண்போம்.

> 'கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
> செயலெழுதித் தீர்ந்தமுகம் திங்களோ காணீர்!'

என்றெல்லாம் ஆங்காங்குப் பல அழகிகளைக் குறித்து அணி நயந்தோன்றப் பாடிய சீரிய செந்தமிழ்ச் செல்வர் இளங்கோவடிகள், சிலம்புச் செல்வத்தினுள் இல்லற விளக்காம் கண்ணகியின் நல்லியல்புகளைக் கோவலன் வாயிலாகக் கூறுவதைக் கேட்கவேண்டும்:

> 'மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!
> காசறு விரையே! கரும்பே தேனே!
> அரும்பெறற் பாவாய்! ஆருயிர் மருந்தே!
> பெருங்குடி வணிகன் பெருமட மகளே!

மலையிடைப் பிறவா மணியே யென்கோ!
அலையிடைப் பிறவா அமுதே யென்கோ !'

என்றெல்லாம் துணைவியின் நலந்துய்த்த வணிக குலத் தோன்றல் வாய்விட்டுப் பாராட்டுவது, சொல்லழகும் பொருளழகும் பெற்றுக் கற்போர் கருத்துக்கு விருந்தளிக்கின்றது.

'கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள.'

என்னும் குறளிலக்கணத்திற்கு இலக்கியமாய்ப் பொன்னும், முத்தும், விரையும், கரும்பும், தேனும் அமைந்தது ஆய்ந்து மகிழத் தக்கது. கலைச் சுவைஞன் கோவலன் இல்லறத் துணைவியின் இயல்பினை நாகரிகமாக நவில்வது எவ்வளவு பொருத்தம் !

அடிகளாரின் அருந்தமிழ்க் காப்பியங் கேட்ட சீத்தலைச் சாத்தனர், தமது காப்பியத்துள் மாதவியீன்ற மலர்க்கொடியாம் 'மாபெரும்பத்தினி மகள் மணிமேகலையின்' அழகினைத் தொடக்கத்திலேயே நயம்படக் காட்டுகின்றார். சித்திரப்பாவை போன்றமர்ந்து மலர் தொடுத்துக்கொண்டிருந்த மணிமேகலை, பெற்றோருற்ற பெருந்துயர் கேட்டுச் சிந்தை நெகிழ்ந்து, கண்ணீர் சிந்துகின்றாள். மதி போன்ற முகத்திலே அமைந்த நீலோற்பல மலர் போன்ற கண்களின் கடை மணியிலிருந்து கண்ணீர் சுரந்து பெருகுகின்றது. இக்காட்சியை மன்மதன் கண்டுவிட்டால் தனது தொழிலுக்குரிய மூலதனத்தை இழந்ததாகக் கருதி, மங்காத தொழிலுக்கு வந்த பங்கத்தால், கன்னல் வில்லையும் ஐம்மலர்க் கணைகளையும் அப்படியே வீசியெறிந்துவிட்டு நடுங்குவானும்! அதுவு

மட்டுமா? மணிமேகலையை ஆடவர் கண்டுவிட்டால் அக லாமற் சுற்றிச் சுற்றி வட்டமிடுவார்களாம்! அவ்வாறு மணிமேகலையால் யாரேனும் கவரப்படாமல் இருப்பார்களாயின், அவர்களின் ஆண்மையைத்தான் ஐயுற வேண்டுமாம்!

'மணிமே கலைதன் மதிமுகந் தன்னுள்
அணிதிகழ் நீலத் தாய்மல ரோட்டிய
கடைமணி யுகுநீர் கண்டன னாயின்
படையிட்டு நடுங்குங் காமன்; பாவையை
ஆடவர் கண்டால் அகறலு முண்டோ?
பேடிய ரன்றோ பெற்றியின் நின்றிடின்?'

பத்திச் சுவை நனிசொட்டச்சொட்டப் பாடிய கவி வலவராம் சேக்கிழாரையும், இத்தகைய அழகுணர்ச்சி விட்டுவிடவில்லை. 'ஆத்தி சூடி, இளம்பிறையணிந்து, மோனத்திருக்கும் முழுவெண் மேனியான்' கோலத் திருப்பணியிலே குலவிய சுந்தரமூர்த்தி நாயனார், பரவை நாச்சியாரைப் பார்க்கின்ற நேரம்; பரவையாரின் திரு வுருவிலே ஈடுபட்ட பத்தரின் நெஞ்சப் பாங்கிற்கொப்பப் பேச்சும் அமைந்துவிடுகிறது.

'கற்பகத்தின் பூங்கொம்போ!
காமன்றன் பெருவாழ்வோ!
பொற்புடைய புண்ணியத்தின்
புண்ணியமோ! புயல்சுமந்து
விற்குவளை பவளமலர்
மதிபூத்த விரைக்கொடியோ!
அற்புதமோ! சிவனருளோ!
யாதோவென் றதிசயித்தார்.'

கற்பகம், காமன், புண்ணியம் எனுஞ்சொற்களைப் பயன்படுத்திப் பாராட்டிய சுந்தரர், கூந்தல், புருவம்,

கண், வாய், முகம் என்பனவற்றை விளக்கிக் கூற, 'புயல் சுமந்து, வில், குவளை, பவளமலர் மதிபூத்த விரைக் கொடியோ ! என்றார். இறுதியிலே 'சிவனருளோ!' என வியந்தது, சிவநேயச் செல்வரின் சிந்தையைப் படம்பிடித்துக் காட்டுகின்றது.

சைவப் பெருங்காப்பிய அழகியைக் கண்ட நாம், வைணவச் செல்வியின் வனப்பை நோக்குவதும் முறை தானே ! மிதிலைச் செல்வியின் மிகுபேரெழிலைப் பல பாத்திரங்கள் வாய்மொழியாகப் பல தன்மைகளில் கம்பர், வரைந்துள்ளார் ; மஞ்சொக்கும் அளகவோதியையும், மழையொக்கும் வடித்த கூந்தலையும், பஞ்சொக்கும் அடிகளையும், பவளம்போல் விரல்களையும், கஞ்சம்போல் முகத்தையும், கடல்போலும் விழிகளையும், அஞ்சொற்களையும், செஞ்சொற்களால் விளக்கியுள்ளார். கங்கையிரு கரையுடைய வெங்களிறனைய குகன், ஓர் இராம பத்தன். அவன் சீதையைக் குறிக்கும்போது, 'அல்லையாண்டு அமைந்த மேனி அழகனும் அவளும்' என, 'அவள்' என்னும் ஒரே சொல்லைப் பயன்படுத்துவதும் உய்த்துணரத் தக்கது. ஆனல், தமது கூற்றாகக் கம்பர் கூறும்போது, கவிஞர்களைக் குறித்துத் தாம் கூறிய தொடர்களையெல்லாம் மனத்துள் நினைத்தே கூறுகின்றார். 'செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளில் சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞர்' என்பது அவர் அமைத்த தொடர் தானே ! ஆகவே, அவரது கற்பனை அத்தற்கொப்ப அமைகிறது. சீதையின் ஓவியத்தைப் பொருத்தமாகத் தீட்டும் வல்லமை வாய்க்கப் பெற்றவன், மன்மதன் ஒருவனே தான். அவன், ஆர்வம் பிடர் பிடித்து உந்த, சீதையின் உருவத்தைத் தீட்டுவதற்காகத் திரைக்கு முன்னல் சென்

றமர்கின்றன். அமுதக் குழம்பு அருகே வைக்கப்பட்டுள்ளது. அதனுள் தூரிகையைத் தோய்த்து ஒருறுப்பைத் தீட்டினன். பின்னர்ச் சீதையின் உண்மையுருவையும் தீட்டிய ஓவியத்தையும் ஒப்பிட்டு நோக்கினன். அவனுக்கே அது பிடிக்கவில்லை. எப்படித் தீட்டி முடிப்பதென்னும் திகைப்பிலே எழுந்து சென்றுவிடுகின்றன்.

'ஆதரித்து, அமுதில் கோல்தோய்த்து
அவயவம் அமைக்குந் தன்மை
யாதெனத் திகைக்கு மல்லால்,
மதனற்கும் எழுத வொண்ணுச் சீதை'

என மன்மதனின் திகைப்பிலும் தோல்வியிலும் கம்பரின் கற்பனை வெற்றி பெறுகின்றது.

கம்பரின் கவிச் சுவையிலே ஆடித் திளைத்த அருமைப் புலவர் உமறிடத்தும் இவ்வுணர்வு ஓங்கி நின்றது. ஆனல் அவ்வழகுணர்ச்சியை வெளிப்படுத்துவதற்குச் சீருவின் ஒரே பகுதிதான் அவருக்கு வாய்ப்பளித்தது. தசைக் கட்டியைப் பெண்ணுருவாக்கிய படலத்தில், அடக்கி வைத்த ஆற்றல்களையெல்லாம் கடல் மடை திறந்தாற் போல வெளிப்படுத்தி அமைதி காண்கின்றர். குழல், புருவம், விழி, இதழ், மொழி போன்ற ஒவ்வொன்றையும் விளக்குவதற்குப் பற்பல உவமைகளைக் கையாளும் திறம் வியந்து போற்றுதற்குரியது. இதோ ஒரு பகுதி :

'பாலென வெளிராக் கனியென வழியாப்
பசுமடற் றேனெனச் சிதரு
ஏலவார் குழலார் செழுங்கரத் தேந்தும்
இளங்கிளி மொழியெனக் குழரு

வேலைவா யமுதம் பிறந்தென வுலகம்
விளங்கிடப் பொன்மழை பொழியச்
சாலவு மிறந்த தருவின நந் தழைப்பத்
தாவரும் இனியமென் மொழியாள்.'

அடுத்தபடி புகழேந்தியார் புகழும் தமயந்தியைக் காண்போம். நளனுக்கேற்ற நங்கையர் திலகம் தமயந்தியினிடத்து, நாட்டுக்கேற்ற நற்பண்புகளையெல்லாம் அமைத்துப் பெண்மையாட்சியின் பெற்றியைக் காட்டி வெற்றி கொள்கிறார் புகழேந்தியார்.

' நாற்குணமும் நாற்படையா, ஐம்புலனும் நல்லமைச்சா,
ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா,—வேற்படையும்
வாளுமே கண்ணு, வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை அரசு.'

என்பது கவிஞர் வாக்கு.

சேர நாட்டுச் செம்மல், வஞ்சியாத வஞ்சியர்கோன், புருடோத்தமவன்மன், முன் பின் கண்டறியாத காரிகையைக் கனவிலே கண்டு மயங்குவதைத் திறம்படக் காட்டுகின்றார், மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளை :

' விண்ணணங் கனைய கன்னியர் பலரென்
கண்முன் நின்றங் கிரக்கினும் கலங்காச்
சித்தம் மத்துறு தயிரிற் றிரிந்து
பித்துறச் செய்தவிப் பேதையார்கொலோ !'

மலை குலைந்தாலும் நிலை குலையாத மன்னனின் உள்ளம், கடையும் தயிர்போலத் திரிந்து பித்தேறித் துன்புறத் தூண்டுகின்றது, அழகின் ஆற்றல். அதுமட்டுமன்றி,

மனோன்மணியைப் பார்த்த கண்ணினால் தேவமாதரைப் பார்ப்பினுங்கூட, அவர் ஆடவராய்க் காட்சி தருகின்றனராம்.

பைந்தமிழ்த் தேர்ப்பாகர் பாரதியாரின் பாடலுக்கு வருவோம். தத்துவ ஞானப் பொருள் தோன்றும் குயில் பாட்டிலே குயில் ஒரு மங்கையாய் மாறுகின்றது.

*'சாமீ...! இவளழகை*
*எற்றே தமிழி லிசைத்திடுவேன் ?'*

எனத் தொடங்குகின்றார் புதுமைக் கவிஞர்.

*'யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோ*
*லினிதாவ தெங்குங் காணோம்!'*

எனப் பாடிய பாவலருக்கு அழகினை விளக்க அம்மொழி கூட இவ்விடத்தில் கைகொடுக்கவில்லையாம்! எனினும் தளராமல், அறிஞர்களுக்கு ஒருவாறு கூற முயலுகின்றார்; 'அவள், முத்தமிழையும் பிழிந்தெடுத்த சாறு' எனக் கூறுகின்றார். கவிதையென்பது கனியையொத்ததுதானே! பருவத்திலே கனிகின்ற கனியைப் போலக் கவிதையும் தருணத்தில்தானே தோன்றும்! அக்கவிதைக் கனியைப் பிழிந்து சாறுக்கி, இசைச் சாறும், நாடகச் சாறும் உடன் சேர்த்து, அவற்றுடன் அமுதத்தையும்கலந்து காய்ச்சப்படுகிறது. வெயிலின் வெப்பமோ, நெருப்பின் சூடோ இப்பொருளைப் பொருத்தமாகக் காயவைக்க உதவா. ஆகவே, ஆய்ந்து நோக்கிக் காதல் வெயிலிலே காய்ச்சிக் கட்டியாக்கப்படுகின்றது. அக்கட்டியினால் படைப்புக் கடவுள் இவ்வழகியின் உடலை ஆக்கியுள்ளானாம்.

" கவிதைக் கனி பிழிந்த சாற்றினிலே பண் கூத்து எனுமிவற்றின் சாரமெல்லாம் ஏற்றி, இன்னமுதைத்தான் கலந்து, காதல் வெயிலிற் காயவைத்த கட்டியினுல் மாது அவளின் மேனி வகுத்தான் பிரமன் என்பேன்."

இது புதுமைக் கவிஞருக்கேற்ற புதுக் கருத்துத்தானே !

இவ்வாருகப் பல்வேறு காலங்களிலே வாழ்ந்த தமிழ்ப் புலவர்கள், நடத்திக் காட்டுகின்ற அழகரசியர் போட்டி, இன்றுகூட இலக்கியத்திலே இடம் பெற்றுப் படிப்போர் மனங்களைக் கவர்ந்து நிற்கிறது. என்றும் நிலைபெற்றிருக்கும் உள்ளழகின் உயர்வைக் காட்டுவதற்காகவே கவிஞர்கள் இத்தகைய புறவழகின் பொலிவுகளையெல்லாம் திறம்படக் காட்டியுள்ளார்கள்; 'கல்வியழகே யழகு,' என்றும், 'அகத்தின் அழகே அழகு,' என்றும் தங்களாராய்ச்சியின் முடிவைப் பலவிடங்களிலும் கூறலானுர்கள். இலக்கியங் காட்டுகின்ற அழகுப் போட்டியைச் சுவைத்த நாம், அழியாத புகழை வழங்குகின்ற உள்ளழகுப் போட்டியிலே உடனடியாக ஈடுபட வேண்டுவது இன்றியமையாததல்லவா ?



# 4. கவிதையில் உவமை

"சென்றிடுவீர் எட்டுத் திக்கும்; கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்," என்று பாடிச் சென்ருர் பாடிய வாய் தேனூறும்படி பாரதியார். கலைச் செல்வங்களைப் பெருக்கும் முயற்சியிலே நாகரிகமடைந்த நாடுகளெல்லாம் முனைந்து நிற்கும் காட்சியை இன்று காண்கிரேும். வாடிக் கிடக்கும் வாழ்க்கைப் பயிருக்கு வனப்பூட்ட வந்த செழுமையே கலையாகும். அக்கலை, இன்று பற்பல வடிவுகளைப் பெற்றுள்ளது. அவ்வடிவுகள் பலவற்றுள் முதன்மையானது கவிதை. ஏனெனில், கலையின் குறிக்கோள் தன்மைகள் முழுதும் கவிதையிலே கவின் பெற அமைகின்றன. அழகை அழியாமற்காப்பது கவிதை; கவிதையை அழியாமற்காப்பது உவமை. 'ஒரு புடையொத்துப் பல புடையொவ்வாத' இரு பொருள்களிடையே தோன்றும் ஒப்புமையை உவமையானது வெளிக் காட்டுகின்றது. கவிஞன் கருதிய பொருளை விளக்கிக் காட்டுவதற்கு இவ்வுவமை சிறந்ததொரு கருவியாகத் துணை புரிகிறது. சாதாரண மக்களிடையே கூட, ஒப்பிட்டுக் காட்டும் திறம் இயல்பாக அமைந்திருப்பதைக் காணலாம். குறிப்பாக, குழந்தைகளிடத்து இவ்வியல்பு மிகுதியாக அமைந்திருக்கும். செயலாலும் பயனுலும் பண்பாலும் ஒரு புடையொத்த பொருள்களென இலக்கண நூல்கள் இவ்வொப்புமையைப் பிரித்துக் கூறுகின்றன. பகைவர் நடுவண் அஞ்சாது பாய்ந்து வெஞ்சமர் புரியும் வீரனைக் காணும்போது, நாம் புலியை நினைக்கிருேம்; கைம்மாறு கருதாமல் வாரி வாரி வழங்கும் வள்ளலைக் காணும்

போது, வான் மழையை நினைக்கிறோம்; செக்கச்செவே லென்ற தோற்றத்துடன் சொக்கவைக்கும் அழகியைப் பார்க்கும்போது பவழத்தை நினைக்கிறோம். இவற்றையே கவிஞன், "புலியன்ன மறவன்", "மாரிபோல் வண்கை", "பவழத்தன்ன மேனி" எனப் புனைந்து கூறுகிறான். செயலாலும், பயனாலும், பண்பாலும் முறையே இவ்வுவமைகள் உருவாகின்றன.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இணையற்ற முறையில் வளர்ந்து வரும் இன்பத் தமிழ் இலக்கியத்தில், உவமைகளுக்குத் தகுதி வாய்ந்த இடம் கொடுக்கப்பட்டுள்ளது. பண்டைப் புலவர்களியற்றிய தண்டமிழ்ச் செய்யுட்களை உய்த்துணர்ந்த மக்கள், உவமைச் சிறப்பை உளங்கனிந்து பாராட்டினார்கள்; அப்பாராட்டின் அறிகுறியாக, அப்புலவர்களின் இயற்பெயரை மறந்து, அவர்கள் கையாண்ட உவமைகளையே அவர்களுக்குப் பெயர்களாகச் சூட்டிவிட்டார்கள். நறுமணம் கமழும் குறுந்தொகையிலே,

*"மக்கள் போகிய அணிலாடு முன்றிற்*
*புலம்பில் போலப் புல்லென்று*
*அலப்பென் தோழி அவரகன்ற ஞான்றே."*

என்று பாடிய புலவர், அணிலாடு முன்றிலார் என வழங்கப்படுகிறார். சொற்றிறம் செறிந்த நற்றிணைப் பாடலில்,

*"தேய்புரிப் பழங்கயிறு போல*
*வீவது கொல்லென் வருந்திய உடம்பே!"*

என்று பாடிய புலவர், தேய்புரிப் பழங்கயிற்றினாரானார். இவர்

களைப் போலவே செம்புலப் பெயனீரார், கல்பொரு சிறு நுரையார், ஊட்டியார், விட்ட குதிரையார், மீனெறி தூண்டிலார் போன்ற எத்தனையோ புலவர்கள் பழந்தமிழ் மக்களின் உவமைச் சுவைக்குச் சான்று பகர்வார்கள்.

நம் இலக்கியங்களிலே காணக்கிடக்கும் பல வகை உவமைகளிலே முதலாவதாக நமது கருத்தைக் கவர்வன, இயற்கைப்பொருள்களைக் கையாண்ட இடங்களாகும். நிலங்களை ஐந்தாகப் பகுத்து, அந்நிலங்களுக்குரிய விலங்குகளையும், பறவைகளையும், மரங்களையும் பின்னணியாக அமைத்து, இயற்கையெழில் பூத்துக் குலுங்கும் இனிய காட்சிகளிலே ஊறித் திளைத்த மக்கள், சுவை சொட்டும் உவமைகளை அமைக்க முடிந்ததில் வியப்பொன்றுமில்லை. காலையிளம்பருதியும், மாலையின் மாணிக்கச் சுடரும், கடற்பரப்பும், ஒளிப்புனலும், மலர்ப் பொழிலும் அவர்தம் அழியாத பாக்களிலே அமைந்துள்ளன. மனத்திற்குகந்த மங்கையரின் உறுப்புக்களை விளக்குவதற்குச் சங்கப் புலவர்கள் பெரும்பாலும் இயற்கைப் பொருள்களையே பயன்படுத்தியிருக்கின்றார்கள். கருமேகத்தையும் கருமணலையும் கூந்தலுக்கு ஒப்பிட்டனர் ; முழு மதியையும் தாமரையையும் முகத்திற்கு ஒப்பிட்டனர் ; பிறையை நெற்றிக்கும், வில்லைப் புருவத்திற்கும், குவளை மலரைக் கண்ணுக்கும், எட்பூவை மூக்குக்கும், இலவிதழை இதழ்களுக்கும், முல்லையைப் பல்லுக்கும், வலம்புரிச்சங்கைக் கழுத்துக்கும், மூங்கிலைத் தோளுக்கும், காந்தள் மலரை விரலுக்கும், கிளியின் அலகை நகத்திற்கும், ஆலிலையை வயிற்றிற்கும், நீர்ச் சுழியை உந்திக்கும், மின்னலை இடைக்கும், யானையின் துதிக்கையைத் துடைக்கும், இளைத்த நாயின் நாவினை அடிக்கும் ஒப்பிட்டு மகிழ்ந்தனர்.

அரிய கருத்துக்களை விளக்குவதற்கும் புலவர்கள் இயற்கையிலிருந்தே உவமைகளை ஆக்கித்தருகின்றார்கள். "அணுவைத் துளைத்து எழுகடலைப் புகட்டிக் குறுகத் தறித்த' குறட்பாக்கள், அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு. அன்பில்லாத உயிரை அறக்கடவுள் காயுமென்பதை விளக்க, என்பில்லாத புழுவை வெயில்காயும் காட்சியை வள்ளுவர் காட்டுகின்றார்; நீரளவேயாகும் நீராம்பலைப் போல, மக்கள் மனத்தளவு உயர்வர் என்கிறார். மயிரிழப்பின் வாழாத கவரிமாவைப்போலப் பெரியார் மானமழிய வாழாரென்கிறார்; மதிக்கண் மறுவைப்போல, குடிப் பிறந்தான் குற்றமும் விளங்கித் தோன்றுமென்கிறார்; தொட்ட அளவிற்கு ஊறும் மணற்கேணி போல, அறிவும் கற்ற அளவுக்கு வளருமென்கிறார்; அடி நீங்கா நிழல் போலத் தீயவர் செய்த தீமையும் தொடருமென்கிறார்; ஆமையைக் காட்டி ஐம்பொறிகளை அடக்கக் கூறுகிறார்; மோப்பக் குழையும் அனிச்சத்தையொத்தவர் விருந்தினர் என்கிறார். இவ்வாறு இயற்கையிலிருந்து மனிதன் கற்றுக்கொள்ள வேண்டிய பாடத்தைச் சுட்டிக் காட்டுகின்றார், வான்புகழ் கொண்ட வள்ளுவப் பெருந்தகை. இயற்கை கற்பிக்கும் பாடத்துடனே தமது ஒழுக்கக் களஞ்சியமாகிய நீதி நெறி விளக்கத்தைத் தொடங்குகின்றார், குமர குருபர அடிகள்.

> *" நீரிற் குமிழி யிளமை; நிறைசெல்வம்*
> *நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்;—நீரில்*
> *எழுத்தாகும் யாக்கை......"*

என்பது அவர்தம் கடவுள் வாழ்த்தின் முற்பகுதி. அப்பரடிகள் இறையுணர்வினால் பெறுகின்ற இன்பத்தை, ஐம்

புலன்களுக்கும் ஒரே நேரத்தில் சுவை பயக்கும் ஐந்து இயற்கைக் காட்சிகளுக்கு ஒப்பிட்டுக் கூறுகின்றார்.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே."

என்பது அவர் பாடிப் பரவசமடைந்த பைந்தமிழ்ப்பா.

அகப்பொருள் ஒழுக்கங்களை விளக்குவதற்கும் புலவர்கள் இயற்கையிலிருந்து உவமைகளைக் கையாண்டுள்ளார்கள். தலைவனது வருகை நோக்கி வாடிய தலைவியின் நிலையையும், தலைவனது வருகைக்குப் பின்னர் அவளடைந்த பொலிவையும் தோழி வாயிலாக விளக்கும் குறிஞ்சிக் கலி,

"நீரற்ற புலமேபோல், புல்லென்றாள் வைகறைக்
கார்பெற்ற புலமேபோல் கவின்பெறும்."

எனக் கூறுவது காண்க. மதம் பிடித்த யானையைக் கண்டு அஞ்சி நடுங்கும் ஆரணங்கின் நிலையை, "சூருறு மஞ்ஞையின் நடுங்க" எனச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தார் கபிலர்.

இவ்வாறு, இயற்கைப்பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் உவமைகளாகக் கையாண்ட புலவர்கள், இயற்கைப் பொருள்களை விளக்குவதற்கும் அவ்வியற்கையிலிருந்தே உவமைகளெடுத்தார்கள். கம்பர் காலைக் கதிரவனை நோக்குகின்றார்.

"கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தா
லெனவிரிந்த கதிர்களெல்லாம்."

எனப் பாடுகின்ருர். இருட்குலத்தை விழுங்கித் தண் ணெளி பரப்பி எழுகின்ற மதியத்தைப் பார்க்கின்ருர், திருத்தக்க தேவர். பளிங்குக் குடத்திலே பாலேந்திக் கருமையான சேற்றிலே ஊற்றுவதற்கு, அக்காட்சியை ஒப்பிடுகின்ருர். சீவகனின் குங்கும மார்பிலே முத்து மாலை இலங்கும் காட்சி, அவருக்குச் செவ்வானிடையே தவழும் பிறை மதியை நினைவூட்டுகின்றது. கலங்கி வரும் காவிரியாறு கடலொடு கலக்கும் காட்சியைக் கூற வந்தார் பட்டினப்பாலை ஆசிரியர்; தாயின் மார்போ டணைந்து பாலருந்தும் குழவிக்கு அதனை ஒப்பிட்டார். மழை பெய்து மலையிலிருந்து அருவியாய் விழுந்த நீர், பேராருகி இறுதியில் கடலுடன் கலக்கின்ற மூன்று பகுதி களையும் உமறுப் புலவர் விலை மகளுக்கும், விளங்கிழை மகளுக்கும், வணிகனுக்கும் ஒப்பிட்டுக் காட்டுந் திறம் மிகுந்த சுவை பயப்பதாகும்.

இவ்விதமாக, இயற்கைப்பொருள்களனைத்தும்—எறும்பு முதல் யானை வரையிலும்—தலையினிழிந்த மயிர் முதல் விண்ணில் விளங்கும் கதிரவன் வரையிலும்—புலவர்தம் நாவிலே பொருந்திப் பொலிவடைந்து நிற்கின்றன. உலகம் பயனற்றதாகக் கருதும் பொருள்களும் புலவர்களின் உவமைக்காகப் பயன்பட்டுச் சிறப்படைகின்றன. சில ஆடுகளின் கழுத்தில் இரு புறங்களிலும் தொங்கிக் கிடக்கும் அதர்களைப் பார்க்கிருேம். அவற்ருல் அவ்விலங்குகளுக்கோ மக்களுக்கோ எவ்விதப் பயனுமில்லை; ஆனல், அவை திருமூலருக்கு அரியதோர் உவமையாய் அமைந்துவிடுகின்றன. ஆசிரியனின் அருள் கிடைத்தாலன்றிக் கற்ற கல்வி பயன்படாதென்பதை விளக்கத் திருமூலர்,

" கூட்டும் குருநந்தி கூட்டினல் லாது
ஆட்டின் கழுத்தில் அதர்கிடந் தற்றே."

எனத் தமது திருமந்திரத்துள் கூறுகின்ருர். பழத்திற்குப் புறத்தே தொங்கிக்கொண்டிருக்கும் முந்திரிக்கொட்டை மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை யவர்களின் கண்களிற்பட்டுக் கருத்தினிலேறி இலக்கியத்தில் இடம் பெற்றுவிடுகிறது. அடக்கமில்லாமல் துள்ளிக் குதிக்கும் பேதையர்களுக்கு அவர் அதனை ஒப்பிட்டார். சதாவதானி சேகுத்தம்பிப் பாவலரவர்கள், மனிதனின் பயனற்ற தன்மையை விளக்குதற்கு, மென்று துப்பப் பட்டுத் தீண்டுவாரற்றுக் கிடக்கும் தாம்பூலக் கோதினைக் கூறுவாராயினர்.

" கொக்கிவிட்ட சங்கிலிபோல் கூண்டெழுந்து நும்மடியார்
சொக்கிவிட்ட நல்லருட்கே தோய்ந்துநின்ரு ரையோநான்
உக்கிவிட்ட நெஞ்சினனுய் உள்ளுடைந்து மெய்மயங்கிக்
கக்கிவிட்ட தம்பலொத்தேன் கல்வத்து நாயகமே!"

என்பது அவர்தம் கல்வத்து நாயக இன்னிசைப் பாமாலையின் ஒரு நறுமலர்.

அடுத்தபடியாக நமது கருத்தைக் கவர்வன, வரலாறு பற்றிய உவமைகளும் புராணம் பற்றிய உவமைகளுமே யாம். நாட்டு மக்களின் நாக்களிலே நடமாடிய வரலாற்று நிகழ்ச்சிகளையும், அவர்களின் இதயங்களில் இடம் பெற்ற கதைப் பாத்திரங்களையும் உவமைகளாகக் கையாள்வது பொருள் விளக்கத்திற்குப் பெரிதும் துணை புரிவதாகும். பண்டைத் தமிழ் மக்கள் இராம

காதையை அறிந்திருந்ததற்குச் சான்றுகள், சங்க இலக்கியங்களிலேயுள்ளன. உமையம்மையாருடன் சிவபெருமான் அமர்ந்திருந்த கயிலை மலையைத் தூக்கி எடுப்பதற்குக் கையைக் கீழ் புகுத்திய இராவணன் அம்மலையை எடுக்க முடியாது வருந்துகிறான். இந்நிகழ்ச்சி ஓர் உவமையாகப் பயன்பட்டுக் குறிஞ்சிநிலக் காட்சியொன்றிற்கு எழிலூட்டுகிறது. வேங்கைமரத்தைப் புலியெனக் கருதிய மதயானை, வெகுளி கொண்டு தன் கொம்பினால் அதன் அடியைக் குத்தியது; ஆனால், கொம்பைப் பறித்தெடுக்க இயலவில்லை; மாமலை எதிரொலிக்கப் பிளிறி வருந்துகின்றது. இக்காட்சியை மீக்கூறிய உவமை நன்கு விளக்கக் காண்கிறோம். இதோ அப்பாடற்பகுதி:

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை
எடுக்கல் செல்லா துழப்பவன் போல
உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை
நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்
கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்."

கற்றோர் ஏத்தும் கலித்தொகையில் மற்றோர் காட்சியைக் காண்போம்: ஓரிடத்தே எதிரெதிரோங்கிய இரு பெருமலைகள்; அவற்றிடையே ஒரு மாணிக்கப்பாறை. அப்பாறையின்கண் ஒரு வேங்கை மரம். அவ்வேங்கையின் அழகிய கிளைகள்மீது இரு புறங்களிலும், இரு மலைகளிலிருந்தும் அருவிகள் வீழ்கின்றன. இக்கவிஞர் காட்சியை

விளக்க, யானைகள் பூநீர் சொரிய அரவிந்த மலர்மீது அமர்ந்திருக்கும் திருமகளை உவமையாக்குவது நயஞ் செறிந்திலங்குகிறது. பாரதக்கதையும் பழங்காலத்தே பயின்று வந்தமை மருதக்கலியின் ஓர் உவமை முகத்தான் புலனாகின்றது. புலியின் நெஞ்சைப் பிளந்து பகை தீர்த்த ஒரு யானைக்கு உவமையாக, நூற்றுவர் தலைவனும் துரியோதனனின் குறங்கைப் பிளந்து உயிர் போக்கிய வீமன் குறிக்கப்படுகிறான். இத்தகைய புராண நிகழ்ச்சிகளன்றி, உண்மை வரலாற்று நிகழ்ச்சிகளும் உவமைகளாய்ப் பயின்று வந்துள்ளன.

" நாடுகண் அகற்றிய உதியஞ் சேரல்
பாடிச் சென்ற பரிசிலர் போல "

" திண்டேர்ப் பொறையன் தொண்டி யன்ன "

என்பன போன்ற எத்தனையோ உவமைகளைச் சங்க இலக்கியங்களிற் காண்கின்றோம். நக்கீரர், பரணர், மாமூலனார், மருதனிள நாகனார், குடவாயிற்கீரத்தனார், வெள்ளி வீதியார் போன்ற புலவர் மணிகள், இவ்வகை உவமைகள் அமைந்த இனிய செய்யுட்கள் பல இயற்றியுள்ளனர்.

பெருங்காப்பியங்களியற்றிய பெரும்புலவர்கள், தங்கள் காப்பியத் தலைவர்களையும், அக்காப்பியங்களியற்ற ஆதரவளித்த வள்ளல்களையும் பொருத்தமான இடங்களில் உவமைகளாகப் புகுத்துவது அவர்களின் நன்றி நிறைந்த நல்லுள்ளங்களை வெளிக்காட்டுகிறது. அவ்வுள்ளங்களின் உயர்வால், கம்பருக்கு ஊக்கமூட்டிய சடையப்பரும், வில்லிக்குத் துணை நின்ற வரபதியாட்கொண்டானும், உமறின் காப்பியத்தை அரங்கேற்றக் கேட்ட

அபுல் காசிமும் அழியாப் புகழை அடைந்துவிடுகின்றனர். இலங்கையை இணைப்பதற்கு அணைகட்ட மாக்குரங்குகள் மாமலைகளைத் தூக்கி வந்து எறிகின்றன. நளன் என்பான் அவற்றைத் தான் கற்ற சிற்ப வித்தைக்கொப்பத் தாங்குகிருன். எவ்வாறெனின், "சடையன் வெண்ணெயில் தஞ்சமென்ருேர்களைத் தாங்கும் தன்மைபோல்" என்பது கம்பர் வாக்கு. வில்லிபுத்தூராழ்வாரோவெனின்,

"கோவல்சூழ் பெண்ணை நாடன்,
கொங்கர்கோன் பாகை வேந்தன்,
பாவலர் மானங் காத்தான்
பங்கயச் செங்கை யென்ன,"

போர்க்களத்திலே நின்ற கன்னனின் கையும் கனகமாரி பொழிந்த காட்சியைக் கூறுகின்ருர். வறண்ட பாலைவனமாகிய அரபுநாடு, உமறுப் புலவரின் கவிதைக்கோல் பட்டுத் தமிழ் நாடாகவே மாறிவிடுகிறது. ஆங்கு வெள்ளை மேகங்கள் பசுங்கடலில் வீழ்ந்து நீருண்டு கருங்கடல் போல வானிலே செறிந்திருக்கின்றன. அதற்கு உவமையாகத் தமது காப்பியத் தலைவர் மாநிலத்தின் மணி விளக்கு நபிகள் நாயகமவர்களின் புகழே பொருந்துவதாகுமென நினைக்கிருர், புலவர் பெருந்தகை.

"தருங்கொடை நயினர் சீர்த்தி
சகமெலாம் பரந்து மிஞ்சி
நெருங்கியே விசும்பில் அண்ட
முகடுற நிறைந்த வேபோல்"

என்பது, உமறுப் புலவர் உள்ளத்தெழுந்த உவமை. வான் மழை பெய்து நாடு வளம் கொழிக்கிறது. நாட்டுச் செழிப்பினிடையே தமது செந்தமிழ்க் காப்பியத்தைச் செவி

மடுத்த அபுல்காசிம் மரைக்காயர் அவர்களின் வீட்டுச் செழிப்பையுங் காட்டி அவருக்கு அழியாப் புகழ் வழங்கு கிறார் கவிஞர் பெருமான்.

“ செந்நெலின் பெருக்கின் கனைகுரற் சகடந்
திசைதொறும் மலிந்தன செருக்கும்
கன்னலங் கழனி புகுத்தறுத் தடைத்த
களமர்கள் ஒலிகுரற் செருக்கும்
துன்னுபூங் கமுகு சிதறுசெம் பழுக்காய்
சுமப்பவர் கம்பலைச்செருக்கும்
மன்னவன் வகுதைத் துரையபுல் காசிம்
வளமனைச் செருக்குமொத் திருக்கும்.”

பெரும்புலவர்கள் நூலைத் தொடங்கும் போது அவர் களது அடக்கத்திலே பிறக்கும் உவமைகள், அவர்களுக்கு அணியாகத் திகழ்கின்றன. பரந்து விரிந்து கிடக்கும் பாற்கடலைப் பருகுவதற்கு முற்படுகின்ற பூனையின் நிலை யில் தாம் இருப்பதாகக் கூறுகிறார், ஆசையினால் இராம காதையை அறையப் புகுந்த கம்பர். அவர், வால்மீகி வட மொழியில் வரைந்து காட்டிய அயோத்தி நாட்டு வளத் தைத் தமிழிலே கூறப் புகுந்து, ‘மூங்கையான் பேசலுற் றான் என்ன யான் மொழியலுற்றேன்,’ எனத் தொடங்கு கிறார். சீறாவின் தொடக்கத்தில் அவையடக்கம் கூற விரும்பிய உமறுப் புலவர்,

“ இடியி டித்திடு மாரவா ரத்தினுக் கெதிரோர்
நொடிநொ டிப்பது போலுமொத் திருந்ததென் னூலே,”

என்றார். 'பணியுமாம் என்றும் பெருமை,' என்பதற் கொப்ப அப்பணிவையே அணியெனக் கொண்ட புலவர் மணிகளின் எண்ணம் வாழ்க !

தமிழ் இலக்கியக் கடலுள் மூழ்கியெடுத்தமுத்துக்களை, இவ்வாறு பல வகைகளாகப் பிரித்துப் பார்த்தோம். இத்தகைய உவமைகளை ஒருவர் ஒரு முறை பயன்படுத்தி விட்டால், பின் வருவோர் அவற்றைக் கையாளும்போது ஒரு விதச் சலிப்பேற்படுவது இயல்பு. அச்சலிப்பைப் போக்குதற்காகப் பின் வருவோர் பல புது முறைகளை மேற்கொள்ளக் காண்கிறோம். அதன் விளைவாகப் பல அணிகளும் பெருகுவதற்குத் தலைப்பட்டன. ஒவ்வோ ரணிக்கும் பல உட்பிரிவுகள் தோன்றின. இன்றோ அணியிலக்கணங் கூறும் நூல்களே பலவாகப் பெருகி விட்டன. மானியலென்றும், மீன்விழியென்றும், தேன் மொழியென்றும், பிறை நுதலென்றும் கூறும் பழைய கருத்தையே,

"மானென அவளைச் சொன்னால்
மருளுதல் அவளுக் கில்லை ;
மீன்விழி உடைய ளென்றால்
மீனிலே கருமை யில்லை ;
தேன்மொழிக் குவமை சொன்னால்
தெவிட்டுதல் தேனுக் குண்டு ;
கூன்பிறை நெற்றி யென்றால்
குறைமுகம் இருண்டு போகும்."

எனப் புது முறையில் கூறும்போது புதுச்சுவை பிறக்கக் காண்கிறோம். இவ்வாறன்றிப் பழைய கருத்துக்களையே பின்பற்றாமல் புது உவமைகளைப் புகுத்த முயல்வது

இலக்கிய வளத்திற்கு வழி செய்வதாகும். அவ்விதம் புது மரபைப் புகுத்தியோருள் ஒரு சிலரைக் காண்போம் :

இற்றைநாள் தமிழ் மறுமலர்ச்சிக்கு வித்திட்டோருள் ஒருவராய பாரதியார், உவமை உலகிலும் ஒரு புதுமையைப் புகுத்தியுள்ளார்.

*" அமுதூற்றினை யொத்த இதழ்களும்*
*நிலவூறித் ததும்பும் விழிகளும்."*

என்னும் தொடர் புதுமையானதாகும். பாரதியாரை அவர்தம் தந்தையார் ஆங்கிலப் பயிற்சி பெற நெல்லை மாநகருக்கு அனுப்புகின்றார். அன்றைய கல்வித் திட்டத்தை வெறுத்த பாரதியாருக்கு அது சற்றும் பிடிக்கவில்லை. ஒரு புது உவமை வழியாகத் தம் வெறுப்பைக் காட்டினார் பாரதியார்; " ஊன்விலை வாணிபம் நல்ல தென்றெரு, பார்ப்பனப் பிள்ளையை நாடுவிப்பது போல"த் தம்மைக் கலை பயில அனுப்பியதாகக் கூறுகிறார். பாஞ்சாலியைப் பந்தயப் பொருளாக அமைத்துச் சூதாடிய தருமன் செயலுக்கு அவர் கூறும் உவமைகள் மிக்க பொருத்தமும் புதுமையும் வாய்ந்தன. ஆள் விற்றுப் பொன் வாங்கிச் செய்த பூணை ஓர் ஆந்தைக்குப் பூட்டுவதும், நீள்விட்டப் பொன் மாளிகையில் பேயினை நேர்ந்து குடியேற்றுவதும், செருப்புத் தோலுக்காகச் செல்வக் குழந்தையைக் கொல்லுவதும் அரிய உவமைகளல்லவா !

பேராசிரியர் சுந்தரம்பிள்ளை, மனோன்மணியத்தில் நாஞ்சில் நாட்டின் வளத்தைக் காட்ட வருகின்றார். மென்மையான இறகுகளினால் உடம்பைத் தடவினால்

யாருக்கும் மயிர்க்கூச்செறியும்; சிறுமியரோ, சற்று அதிகமாகவே சிலிர்த்துச் சிரித்துவிடுவர். நாஞ்சில் நாட்டு நிலம் ஒரு சிறுமியை ஒத்தது. உழவர்களாகிய சிறுவர்கள், கலப்பை முனையாகிய தூவியால் நாஞ்சிற்சிறுமியின் மாந்தளிர் மேனியைத் தொட்டு விளையாடுகிறார்கள். சிறுமியோ, தொடுவதற்கு முன்னரே பயிராகிய மயிர் சிலிர்த்துப் பல வளங்களாகிய நகையைச் சிந்துகிறாள். இதோ அப்பகுதி:

"தூவியால் தம்முடல் நீவிடில் சிரிக்கும்
சிறுமிய ரென்னவச் செழுநில நங்கை
உழுபடைக் கொழுமுனை தொடுமுனங் கூசி
உடல்குழைந் தெங்கும் உலப்பறு செல்வப்
பயிர்மயிர் சிலிர்த்துப் பல்வளம் நகுவள்."

இக்காலப் புலவர்களுள் புதுவைக் கவிஞர் பாரதிதாசன் இத்துறையில் ஒரு புதுமைக் கவிஞராய் விளங்குகிறார். 'ஓர் அழகி; சிப்பம் பிரித்தெடுத்த சீனத்துப் பொம்மை போன்றாள்; தென்னம்பாளை பிளந்து சிந்திடும் சிரிப்புக்காரி; மயிலிறகின் அடியைப்போல் பல்லிலெல்லாம் ஒளியுடையாள்; வெண்முத்தில் நீலம் விளையாடிக் கொண்டிருக்கும் கண்ணுடையாள்; பழச்சுளையின் வாயுடையாள்; கண்ணாடிக் கன்னத்தாள். இவ்வழகிக்கேற்ற ஓர் ஆணழகன் மீதுயர்ந்த இரு தோள்கள், ஒளியை வாரி வீசுகின்ற குன்றங்கள்; மறவன் தூக்கி ஊதுகின்ற வளை கொம்பின் புருவத்தின்மேல் உயர் நெற்றி அஞ்சாமை முழங்கும் கூடம்; மோதுகின்ற இளங்களிறு போல நடந்து முன்வாயிற் புன்னகையை விளைவிப்பான்; கிளிக் கழுத்தின் பொன் வரிபோல அரும்பும் மீசை; கீழ்க் கடலின் மாலை வெயில் கலந்த நீல ஒளித்திரைபோல் தலை

மயிர் ; சிங்கத்தின் தோற்றம். இவ்வழகனும் அழகியும் வெள்ளத்திலேயொரு வெள்ளமுமாய் நல்ல வீணையும் நாதமுமாகின்றனர். பின்னர்ப் பிரிவின்போது துயர் பெருகுகிறது. கள்ளியும் பாலை போலக் கண்ணீர் விட்டுக் கடல் நீரில் சுருப்போலப் படுக்கையிலே கிடக்கிருள் அழகி ; காதலனுக்கு ஒரு கடிதம் தீட்டுகிருள். அக்கடிதத்தைப் பெற்ற காதலன் தணலிலே நின்றிருப்போர் தண்ணீரில் தாவுதல் போல 'எழுத்தினை விழிகள் தாவ இதயத்தால் வாசிக்கின்ருன்.' இவ்வியத்தகு காதல் ஓவியத்தையும், இதற்கு உயிரூட்டும் புத்தம்புதிய உவமைகளையும் எப்படி மறக்க முடியும்?

கவிஞர் பாரதிதாசன் தமிழ் மொழியின் இனிமையை உவமையாகக் கூறும் இடங்கள் உள்ளங்களில் இன்பத் தேன் பொழிவனவாகும்.

"தண்டமிழின் இனிமையைப்போல் இனிய சொல்லான்"

"தணல்நிறமாம் மாம்பழத்தில்
தமிழ்நிகர் சுவையைக் கண்டான்"

"குழந்தைக ளுடனிருந்து கொஞ்சியே உண்ணுகின்ருர்
பழந்தமிழ்ப் பொருளை அள்ளிப்
படித்தவர் விழுங்கு தல்போல்"

"தமிழின்பத் தமிழெங்கள் உயிருக்கு நேர்."

"தமிழெங்கள் கவிதைக்கு வயிரத்திண் தோள்."

"தமிழ் கருமான்செய் படைவீடு ; நானங்கோர் மறவன்."

"கன்னற் பொருள்தரும் தமிழே!
நீ ஓர் பூக்காடு; நானோர் தும்பி."

இதுதான் உவமையிற் புதுமை! கவிதையில் உவமை சிறக்க, உவமையிற் புதுமை புகவேண்டும்.

# 5. "யாதும் ஊரே."

தண்டமிழ்ச் சோலைக்கு வனப்பும் வளப்பமும் வழங்க இதோ புத்தாண்டு மலர்கிறது. செந்தமிழ் நாட்டார் சிந்தை மகிழ, புத்துயிரும், புது வாழ்வும் புகுவன வாகுக! இந்த நாட்டிலே வாழ்ந்த நம் முன்னோர்கள், நமக்கு விட்டுச் சென்ற செல்வங்களுக்கு நாம் நன்றி செலுத்தவேண்டும். சிந்தைக்கினிய செந்தமிழ் மொழியும், அம்மொழியின் தேனினுமினிய தெவிட்டாத இலக்கியங் களும், அவ்விலக்கியங்கள் காட்டும் கவினுர் கலைகளும், அக்கலைகள் பேசும் பண்பாடும், அப்பண்பாடு வளர்த்த நாகரிகமும் இணையில்லாத செல்வங்கள். முன்னோர்களுக் கேற்ற பின்னோர்களாக வாழ்வதற்கு—புலிகள் வாழ்ந்த குகைகளிலே எலிகள் வாழவில்லை என்பதை எடுத்துக் காட்டுவதற்கு—அவர்கள் கண்ட வாழ்விலும் கொண்ட கொள்கைகளிலும் சிறிது சிந்தனையைச் செலுத்துவது, இது போன்ற தருணங்களுக்குப் பொருந்துவதுதான்.

மனிதன் பெற்றுள்ள பேறுகளுள் தலை சிறந்தது சிந்தனை. இன்றைய உலகில் செயற்கரிய செயல்களைச் செய்து, அவன் சிறந்து விளங்குவதற்குக் காரணமாய் அமைந்துள்ளதும் இச்சிந்தனையேயாம். அறிவியற்கலை யின் வளர்ச்சி, அனைத்துலகத்தையும் அவனுக்கு அடிமை யாக்கிக் கொடுத்துள்ளது. ஆயிரக் கணக்கான கற்களுக் கப்பாலுள்ள செய்திகளை மனிதன் உடனுக்குடன் அறி கின்றான்; காண்கின்றான்; உணர்கின்றான்; கொடுவிலங் குகள் வாழும் காடுகளை வானளாவும் மாளிகைகளைக்

கொண்ட நகர்களாக மாற்றிவிட்டான்; பல்லொடு பல் மோதிப் பறை கொட்டும் பனித் துருவங்களை வென்றுவிட்டான்; உலகக் கொடுமுடியாம் எவரெஸ்டின் உச்சியைக் கூட மிதித்துவிட்டான்; ஒரு நாட்பொழுதில் உலகமனைத்தையும் வலம் வரும் வல்லமையையும் பெற்றுவிட்டான்; ஏனைய கோள்களை எட்டிப் பிடிப்பதற்குரிய முயற்சியைத் திட்டமிட்டு ஆற்றுகின்றான். இவ்வாறு இடத்தையும் காலத்தையும் வென்று வாழ்கின்ற மனிதன், இன்று உலகப் பொதுமையைக் குறித்துச் சிந்திக்கத் தலைப்பட்டுள்ளான்.

மனிதனுக்கு மனிதன், வீட்டுக்கு வீடு, நாட்டுக்கு நாடு, போட்டியும் பொறாமையும் வேற்றுமைகள் பல விளைவித்துள்ளன. மனிதனின் தோற்றமே பல்வேறு வேற்றுமைகளை இயல்பாகக் கொண்டதுதான். கோடிக் கணக்கான மனிதர்களில், ஒருவர் முகம் இன்னொருவர் முகத்தை ஒத்திருப்பதில்லை. ஒருவர் குரல் இன்னொருவர் குரலை ஒத்திருப்பதில்லை. எனினும், வீட்டு வாழ்வும் நாட்டு வாழ்வும் அமைதியுற்றோங்க, வேற்றுமைகளிலே ஒற்றுமையைக் காணவேண்டும்; 'உலக மக்கள் அனைவரும் ஒன்று; நாட்டுக்கு நாடு உயர்வு தாழ்வு இல்லை,' என்னுமெண்ணம் உயர்ந்தோங்கவேண்டும். இக்கருத்துக்கு அரண் செய்யவே ஐக்கிய நாட்டவையும், மக்களினத்தின் ஒருமையையும் பெருமையையும் உணர்ந்து, அரும்பணியாற்றி வருகின்றது. இவ்வுண்மை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இந்நாட்டிலே வாழ்ந்து வந்த நம் முன்னோர்களின் உள்ளங்களிலே ஊறிக் கிடந்த ஒன்றாகும். இவ்வுண்மையைத்—தமிழ்ப் பண்பாட்டின் உயிர் நிலையைப்—பண்டைத் தமிழ்க்கொண்டல், கணியன் பூங்குன்ற

ஞர் கனிதமிழ்ச் சொற்களால் கணித்துள்ளார். "யாதும் ஊரே ; யாவரும் கேளிர்," என்று தொடங்குவது அவர் பாட்டு.

'யான், எனது' என்னும் உணர்வு மனிதனின் உடன் பிறப்பு. அகிலமெல்லாம் கட்டி ஆளினும், அவனது ஆசைக்கு ஓர் அளவில்லே. 'இதைச் செய்தவன் நான்', 'அதைச் சொன்னவன் நான்', 'இந்தச் சாலேயைச் சமைத் தவன் நான்', 'அந்தச் சோலேயை அமைத்தவன் நான்', 'இக்கோயிலெடுத்தவன் நான்', 'அக்குளம் வெட்டியவன் நான்'—இப்படிப் பெருமை பாராட்டுவது மனிதன் இயல்பு. உலக மொழிகளனைத்திலும் மக்கள் மிகுதியாகப் பயன்படுத்தும் சொல்லேக் குறித்து ஆராயத் தொடங்கிய அறிஞர் ஒருவர், 'யான், எனது' என்னும் இவ்விரு சொற் களுக்கும் முதலிடம் தருகின்ருர். அறிஞர் பெருமக்களும், மெய்ஞ்ஞான மேதைகளும், தத்துவஞான வித்தகர்களும் இத்தகைய உணர்வு அகல்வதையே, மனித வாழ்வின் மாபெரும்பேறெனக் கருதினர்கள். தன்னந்தனியனுய் வாழும் ஒருவனுக்கு, இல்லற வாழ்வின் உயர்வைக்காட்டி, 'அறன் எனப்படுவதே இல்வாழ்க்கை,' எனக் கூறத் தொடங்கினர் திருவள்ளுவர். தன்னலத்தின் உறைவிடமா யிருந்தோன், இல்லறமென்னும் நல்லறத்திலே நுழைந்த பின், 'தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற்காத்து' வாழும் துணைவியினிடத்தே அன்பு சுரக்க வாழ்கின்ருன். அடுத்தபடியாக, அவ்வன்பு அறிவறிந்த மக்களிடத்தே பரவுகின்றது. அன்பின் உயர்வை அறிந் தவன், 'அன்பின் வழியது உயிர்நிலே,' என்னும் உண்மை யினே உணர்கின்ருன். இவ்வுண்மையை வெளிக் காட்டும் வகையிலே, 'செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்

திருந்து வானோர்க்கு நல்விருந்தா'கின்றான். இவ்வாறு நாடோறும் விரிவடைகின்ற அன்பு, ஒப்புரவாகவும் ஈகை யாகவும் மலர்கின்றது; இறுதியாக, மன்னுயிர் ஓம்பி அருளாட்சி பெறும் துறவற நிலையிலே,

"யான்எனது என்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்."

எனத் தகும் தன்மையதாய்க் கனிகின்றது. மனிதனாய்ப் பிறந்து, இல்லறத்தை மேற்கொண்டு, வையத்துள் வாழ் வாங்கு வாழ்ந்த போது, 'வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்,' எனக் கருதப்பட்டவன், செருக்கறுத்து இம்முதிர்ந்த நிலையிலே 'வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்,' என எண்ணப்படுதல் சிந்தனைக்குரிய சிறந்த கருத்தாகும். இதைத்தான், 'தான் செத்திருந்து உலக முழுவதும் அரசாளும் தத்துவம்' என மெய்யறிவு வாய்க் கப் பெற்ற ஞான மேதைகள் குறித்துப் போந்தார்கள்.

இவ்வாறு பல்வேறு நிலையிலும் பாராட்டுதற்குரிய பண்பாட்டுச் சிகரத்தைத்தான் பழந்தமிழ்ப் புலவர், தமது பாவடியின் முதலடியில், "யாதும் ஊரே ; யாவரும் கேளிர்" எனப் படம் பிடித்துக் காட்டினர். 'இன்று புதுமைக் கொள் கையெனப் புகழப்படும் இப்பொதுமைக் கொள்கை, மிகு பழங்காலத்தில் இந்நாட்டிலே எழுந்த பழமைக்குரல் தானே?' என எண்ணும்போது பழமையின் பெருமை நம்மை மகிழ்விக்கின்றது. வேறுபாடுகளால் மக்கள் மயங்கி மாறுபடும் காலங்களிலெல்லாம் அக்குரலை நம் அறிஞர் பெருமக்கள் நினைந்தும் நினைவூட்டியும் வந்துள் ளார்கள்.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் ; சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்."

என்பது வள்ளுவர் வாக்கு. "ஒன்றே குலமும் ; ஒரு வனே தேவனும்," என்பது பிற்காலத்தெழுந்த பேருரை. பெருங்காப்பியங்கள் ஆக்கிய புலவர் பெருமக்களும் இப் பொதுமையைத் தங்கள் நூல்களில் நடு நாயகமாக அமைத்தார்கள். ஊரூராக, நாடு நாடாகச் சென்று அமுத சுரபியின் அகன்சுரை அளித்த அமுதத்தைப் பாரக மடங்கலும் பசிப்பிணி அறுப்பதற்குப் பயன்படுத்திய கோவலன் குலக்கொழுந்து மணிமேகலையின் துறவினைப் பாடினர், மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனர். சோழ நாட்டின் தலைநகராகிய காவிரிப்பூம்பட்டினத்திலே பிறந்து, பாண்டி நாட்டிலே துணைவனை இழந்து, சேர நாட்டிலே கோயில் கொண்ட மாநிலம் போற்றும் மாபெரும்பத்தினி கண்ணகியின் வரலாற்றைக் கூறவந் தார், வளமார் புலமை இளங்கோவடிகள். வடநாட் டயோத்தியிலே தம்பியர் மூவருடன் தோன்றி, தென்னு டைந்து, வேடுவனுகிய குகனையும், குரக்கினத்தரசாகிய சுக்கிரீவனையும், அரக்கர் குலத்தின் வீடணனையும் உடன் பிறந்தோராக அணைத்தெடுத்த இராமனின் காதையை 'என்றுமுள தென்றமிழிலே இயம்பியிசை கொண்டார்' கம்பர். அந்தணர், குயவர், பாணர் போன்ற பல்வேறு குடிகளிலே தோன்றி, "கூடு மன்பினில் கும்பிட லேயன்றி, வீடும் வேண்டா விறலினராய்" விளங்கிய நாயன்மார் அறுபத்து மூவரின் வரலாற்றைப் பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடினர் கவி வலவர் சேக்கிழார். "மாநிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்ப்" பிறந்த பெருமானர் முகம்மது நபியவர்களின் வாழ்க்கையைப்

பாடினர் புலவர் பெருமான் உமறு. இவ்வாறு உலகப் பொதுமையும் மனித ஒருமையும் நம்மிலக்கியங்களில் இழைந்து செல்வதோடு மட்டுமன்றி, இக்கருத்துத் தமிழ் நூல்களனைத்தின் தொடக்கத்திலும், திலகம் போலத் திகழ்வது வியப்பூட்டுவதொன்றாகும். தமிழ்ப் பெரும் புலவர்கள் உலகப் பொதுமையை எண்ணிய பின்னரே, தத்தம் நூல்களைத் தொடங்கினரென எண்ணுவது தவறாகாது.

"வடவேங்கடம் தென்குமரி யாயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்" எனத் தொடங்குவது தொல்காப்பியப் பாயிரம். "ஆதிபகவன் முதற்றே உலகு" என்பது வள்ளுவம். "உலகமுவப்ப" என்ற தொடக்கம், பத்துப் பாட்டின் முதற்பாட்டாம் திருமுருகாற்றுப்படைக்கு அணி செய்கிறது. "கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ் வங்கண் உலகளித்தலான்" என்பது சிலம்புச் செல்வம். "உலகந் திரியா ஓங்குயர் விழுச்சீர்" என்பது மணிமேகலை. "மூவா முதலா உலகம்மொரு மூன்று மேத்த" என்பது சிந்தாமணி. "உலகம் யாவை யும் தாமுள வாக்கலும்" என்பது கம்பராமாயணம். "உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்" என்பது பெரியபுராணம். இவ்வாறு பெருநூல்களைத் தொடங்கு முன் பெரும்பான்மையரான தமிழ்ப் புலவர்கள் உலகப் பொதுமையிலே ஈடுபடுகின்ற தன்மை தனிச்சுவை பயப்ப தொன்றாகும்.

இவ்வுணர்ச்சியால் உந்தப்பட்ட தமிழ் மக்கள், இன்பப் பூங்காவாகிய தங்கள் நாட்டை விட்டு அயல் நாடுகளுக்குச் செல்ல அஞ்சவில்லை; அலைகளைப் பிளந்

தும், மலைகளைக் கடந்தும் பிற நாடுகளுக்குப் பீடுடன் சென்றுர்கள்; உரோம, கிரேக்க, அராபிய, சீன நாடுகளுடன் மிகு பழங்காலத்திலேயே வாணிகத் தொடர்பு பூண்டார்கள்; ஈழம், கடாரம், மலாயா, சாவகம், ஆப்பிரிக்காப்போன்ற காடுகளாய்க் காட்சியளித்த நாடுகளையெல்லாம், வளங்கொழிக்கும் பொன்னுர் நிலமாக மாற்றினுர்கள். இன்று அந்நாடுகள் வையகம் போற்ற வாழ்கின்றன. " யாதும் ஊரே," எனும் குறிக்கோள் விளைத்த சிறப்பினை எண்ணி மகிழ்வோம் ! இன்பத் தமிழ் நாடும், இனிய தமிழ் மொழியும் வாழ்க ! வையகமெல்லாம் வாழ்க!

---

# 6. ஆசு கவி

"காவலர் வெருண்டு போற்றும் கவித்தமிழ்ப் புலவர்"; "சொற்படி நடத்தும் வலிதுன்னு புலவோர்" என இவ்வாறெல்லாம் புலவர் பெருமக்களின் தகுதி யறிந்து பாராட்டுகின்ற தமிழ்த் தொடர் மணிகள் ஒன் றிரண்டல்ல. செல்வத்துட்செல்வமன்றே புலமைச் செல் வம்! அச்செல்வம் வாய்க்கப்பெற்ற புலவர்களைக் 'கவி, கமகன், வாதி, வாக்கி' என இலக்கண நூலார் நான்கு வகையாகப் பிரித்தனர். தன்னுடைய நிறைமதியாலோ, கல்விப் பெருமையாலோ, ஒருவன் சொன்ன நூல் விகற் பத்தைத் தான் பயிலாதிருந்தும் பொருள் விரிக்க வல்ல வனைக் 'கமகன்' என்றனர். அறம், பொருள், இன்பம், வீடு என்பன தம்மில் விரவாமல் கேட்போர் வேட்ப இனியன கூறும் ஆற்றலுடையானை 'வாக்கி' என்றனர். முதற்பிரிவினராகிய கவியை மேலும் நான்கு பிரிவாக் கினர்.

> "கவிகள் தாம்,
> ஆசு மதுரமே சித்திரம்வித் தாரமெனப்
> பேசுவர் நால்வர்க்கும் பேர்."

என்பது பாட்டியல்.

இந்நால்வகைக் கவிகளுள் முதல் வகையே ஆசு கவி. இரண்டாவது வகை, மதுர கவி. அதாவது, ஓசையும் பொருளும் இனிதாய், முழுதும் செஞ்சொல்லாய், அணி யும் தொடையும் தெற்றென்று கேட்டார் துதிக்கும்படி பாடுவது. மூன்றாவது வகை சித்திரகவி. அதாவது,

மாலை மாற்று, முரசபந்தம், சுழிகுளம் போன்ற பல விகற்பத்தால் செய்யப்பட்டு, ஓசை கெடாமல், தொன்னூல் மரபு தவருமல் பன்னுவது. நான்காவது, வித்தாரம் அல்லது அகலக் கவி. அதாவது, பல செய்யுட்கள் கூடி வந்த தொடர்நிலைச் செய்யுளும், அடி பலவாய் நடக்கும் தனிப்பாச் செய்யுளுமாகும் :

இந்நான்கு வகைக் கவிகளுள் ஆசு கவியின் இலக் கணத்தைச் சிறிது விரிவாகக் காண்போம்.

"பேரெழுத்திற் சொல்லிற் பொருளிற் பெருங்கவியிற்
சீரலங்கா ரத்திற் றெரிந்தொருவன்—நேர்கொடுத்த
உள்ளுறைக் கப்போ துரைப்பதனை யாசென்ருர்
எள்ளாத நூலோர் எடுத்து."

என்பது வச்சணந்தி மாலை குறிப்பிடும் இலக்கணம். குறிப்பிட்ட ஓர் எழுத்தையோ, சொல்லையோ, பொருளையோ, யாப்பையோ, அணியையோ கொடுத்து, அதன்படி ஒருவன் பாடச் சொல்லும் போது, அவனெதிரே பாடப்படுவது ஆசு கவியாக அமையும். இக்கருத்தையே இலக்கண விளக்கமுடையாரும்,

"எழுத்துச் சொற்பொரு ளணியாப் பிவையின்
விழுத்தக ஒருவன் விளம்பிய உள்ளுறைக்
கப்பொழு துரைப்ப தாசு கவியே."

என்ருர்.

தமிழ் இலக்கியப் பெருங்கடலுள், ஆசு என்னும் சொல், பல பொருள்களில் பயின்றுவரக் காண்கிரேம். "ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ!" என்பது ஔவையாரின் அருந்தமிழ். இங்கு, 'பற்றுக்கோடு' என்பது பொருள். "அரிய கற்று ஆசற்ருர் கண்ணும்"

என்பது வள்ளுவர்தம் தெள்ளுதமிழ். இங்குக் 'குற்றம்' என்பது பொருள். "தேசிக மென்றிவை ஆசின் உணர்ந்து" என்பது இளங்கோவடிகளின் இன்மொழி. இங்கு, 'நுட்பம்' என்பது பொருள். "அமலனை ஆசற வுணர்ந்த அமலர்" என்பது வாகீசர் வாக்கு. இங்கு, 'ஐயம்' என்பது பொருள். இவ்வாறே அற்பம், துன்பம், இலக்கு, பற்றுசு, கவசம், ஆணவமலம், வாளின் கைப்பிடி, நூலிழைக்குங் கருவி போன்ற பல பொருள் களைக் குறிக்க இவ்வீரெழுத்தொருசொல் பயன்படு கிறது. இவை தவிர, நேரிசை வெண்பாவின் முதற்குற ளில் இறுதிச் சீருக்கும் தனிச்சொற்குமிடையில் கூட்டப் படும் அசையினை ஆசென்று வழங்குகிறது காரிகை. ஆசு என்னும் தமிழ்ச் சொல்லுக்கு இப்பொருள்களெல்லாமிருப் பினும், ஆசு கவியென்னும் போது, இப்பொருள்களுள் ஒன்றேனும் அதில் அமையவில்லை. வடமொழியில் 'ஆசு' என்பதற்கு 'விரைவு' என்பது பொருள். இச்சொல்லி லிருந்தே 'ஆசு கவி' தோன்றிற்றென்பர்.

'அக்கணம் ஆசுவின் ஆசுகன் மைந்தன்' எனும் பாரதத் தொடரில் இப்பொருள் அமைந்திருப்பதைக் காணலாம். இப்பொருள் பற்றியே, விரைவாகச் செல்வது காரணமாக அம்பை ஆசுகமென்றும், வாயுவை ஆசுகன் என்றும், பறவையை ஆசுகியென்றும் வழங்கலாயினர். இவை போன்றே, கொடுத்த பொருளை, அடுத்த பொழு திற்பாடும் புலவனையும், அவன் பாடுகின்ற பாட்டினையும் 'ஆசு கவி' என்று வழங்கினர். இதனையே ஆங்கிலத்தில் 'Extempore verse' எனக் குறித்தனர்.

தமிழ் மொழியில் மட்டுமன்றி, வடமொழி போன்ற பிற மொழிகளிலும் ஆசு கவி பாடும் இயல்பு மிகுதியாய்

உள்ளது. இந்தி, உர்தூப் போன்ற மொழிகளில் அமைக்கப்படுகின்ற "முஷாயிராக்கள்" எனப்படும் கவியரங்குகள், ஆசு கவியாற்றலைப் பெருக்குவதற்குப் பெரிதும் பயன்பட்டு வருகின்றன. வளமார்ந்த மொழிகளில் வழுவற்ற புலமையும், வல்லோனின் அருளும் வாய்க்கப்பெற்ற சொல்லேருழவர்களுக்கு, மாசில்லாத ஆசு கவிகள் பாடுவது எளிதேயாகும். வடமொழிப் புலவர்களுள், ஆசுகவி பாடுவதில் அருந்திறன் கைவரப் பெற்று விளங்கியோன் காளிதாசன். வடமொழியில் உயிர்மெய் வரிசையில் ககரவினத்தில் அமைந்துள்ள நான்கு எழுத்துக்களும் ஈற்றிலேயமைய, ஒரு செய்யுள் பாடக்கேட்ட போது, காளிதாசன் தங்குதடையின்றிப் பாடிவிடுகின்முன்; அச்செய்யுளை ஓர் ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே நிகழ்கின்ற உரையாடலின் உருவிலே அமைக்கின்முன். வழியிலே ஒரு சிறுமியைக் கண்ட ஆண்மகனொருவன், "சிறுமியே, உன் பெயரென்ன?" என்று வினவுகின்முன். "காஞ்சனமாலா" என்பது அவளளித்த விடை. பின்னர், "நீ யாருடைய மகள்?" எனக் கேட்கிருன். "நான் கனகலதையின் புதல்வி," என்கிருள் அவள். "கையிலிருப்பதென்ன?" என்று மீண்டும் கேள்வியை அடுக்குகின்முன். "ஏட்டுச்சுவடி" எனக் கூறுகிருள். "அதில் எழுதப்பட்டிருப்பதென்ன?" என்று மீண்டும் தொடர்ந்து கேட்கிருன். உடனே ககர வரிசையின் நான்கு எழுத்துக்களையும் சிறுமி விடையாகக் கூறுகிருள்.

இதோ பாட்டு:

*"காத்வம் பாலே? காஞ்சன மாலா;*
*கஸ்யா புத்ரீ? கனகலதா யாஹ;*
*ஹஸ்தே கிம்தே? தாலீ பத்ரம்;*
*காவா ரேகா? க, க்க, க்ஹ, க்கஹ."*

பிறருக்குக் கடிதாகத் தோன்றும் ஒரு முயற்சி, வல்லான் வாய்ப்பட்டு எளிமையும் எழிலும் கலந்ததாகத் தோன்று கிறது.

இவ்வாறு, விரும்பிய பொருளைக் கொண்டு விரைவாகக் கவி பாடும் ஆற்றலுடையார் பலர், பழந்தமிழ் நாட்டில் வாழ்ந்திருந்த போதிலும், பிற்காலத்திலேதான் ஆசு கவியை ஒரு தனிக்கலையாகத் தமிழகம் வளர்க்கத் தொடங்கியது. தமிழ் இலக்கியத்துள் இடம் பெற்றுள்ள முதல் ஆசுகவியாக இறையனார் அருளியதாகக் கூறப்படும் குறுந்தொகையின் இரண்டாவது செய்யுளையே கொள்ளுதல் வேண்டும். ஏனெனில், அது தருமி என்னும் அந்தணனுக்குப் பொற்கிழி வாங்கிக்கொடுப்பதற்குச் 'சிந்தா சமத்தியாக' இறையனாரால் பாடப்பட்டதென்பது பண்டு தொட்டே பயின்றுவரும் வழக்கு. "நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி நற்கனகக் கிழிதருமிக் கருளி னேன் காண்," என்பது சம்பந்தர் கூற்று.

*"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி !*
*காமம் செப்பாது கண்டது மொழிமோ :*
*பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்*
*செறியெயிற் றரிவை கூந்தலின்*
*நறியவு முளவோ நீயறியும் பூவே ?"*

என்னும் இப்பாட்டு இலக்கியச் சுவை நிரம்பியதாகும்.

இறையனாரின் இப்பாட்டிலே குற்றங்கண்ட நக்கீரனாரும், ஆசு கவி பாடும் ஆற்றல் பெற்றவராயிருந்தாரென அறிகிறோம். சங்கத்துச் சான்றோர்களுடன் நக்கீரர் வைகிவருநாளில், கொண்டான் என்போன் பட்டி மண்டபமடைந்து, வடமொழியே சிறப்புடையதெனவும், தமிழ்

மொழி சிறப்புடையதன்றெனவும் இழித்துக் கூறினன். அது கேட்ட நக்கீரர் அங்கதம் பாடி அவன் உயிரிழக்கும் படி செய்தார். அந்நிகழ்ச்சியைக் கண்ட ஏனையோர் அவனை உயிர்ப்பிக்குமாறு வேண்டுகின்றனர். உடனே நக்கீரர் அவன் பிழைக்கப் பாடுகின்றார்.

"ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியி லகத்தியனா ராணையினாற்
செந்தமிழே தீர்க்கசுவா கா."

இதனைப் பாடி முடித்ததும் செத்தவன் பிழைத்தான் என்பர்.

இவ்வாறு பழந்தமிழ் இலக்கியத்தில் ஆசு கவியின் இலக்கணத்திற்குப் பொருந்துகின்ற பல பாக்கள் இருப் பினும், இடைக்காலத்திலேதான் இத்துறை வளம் பெறத் தொடங்கிற்று. புலவர் பலர், ஆசு கவி பாடும் தமது ஆற்றலைச் சீட்டுக்கவிகள் வாயிலாக வெளியிட்டுள்ள னர். சிலர் தம் பெயருடன் சேர்த்து, ஆசு கவி என்னும் அடையினைத் தாங்கியிருந்தனர். சேறைக் கவிராச பிள்ளையென்பார், 'ஆசு கவி ராச சிங்கம்' என வழங்கப் பட்டார். பாண்டிய ராசன் இவரை யாரென்று கேட்ட தற்கு இவர் கூறிய மறுமொழியிலே, "உள்ளுக்கென்னை யழைப்பித்து ஆசிலுரைக்கும் கவிதைகள் கேட்டென்பால், வரிசைகள், பரிசில்கள் நல்கி இரட்சித்திட வேணும்," என்று வேண்டுகின்றார்.

ஆசு கவித் துறையிலே கவி காளமேகம் பெற்றிருந்த ஆற்றல் வியந்து போற்றுதற்குரியது. அதனாலன்றோ அவருடலம் சுடுகாட்டில் எரியும்போது, "ஆசு கவியால்

அகில உலகெங்கும் வீசு புகழ்க்காள மேகம்" என இரட்டையர் இணைந்து பாடியுள்ளனர்? திருமலைராயன் பட்டினத்திற்குச் சென்று அவைக்களப் புலவன் அதிமதுர கவியும் அறுபத்து நான்கு தண்டிகைப் புலவர்களும் கண்டு வியக்குமாறு யமகண்டம் பாடுகின்றார் காள மேகம். அவ்வாறு பாடிய பாடல்களிலே ஆசு கவியின் வகைகள் அனைத்தும் விளங்கக் காண்கிறோம்.

பாடுவதற்குரிய பொருள் கொடுக்க, ஆசு கவி பாடுவது ஒரு வகை. அதற்கிணங்கத் திருமாலின் பத்து அவதாரங்களையும் ஒரு வெண்பாவில் அடக்கிப் பாடக் கேட்கின்றனர். பின்னர், மும்மூர்த்திகளின் பெயரும், கறியும், கருவியும், பூணும், ஊர்தியும், தங்குமிடங்களும், உணவும் ஒரு வெண்பாவிலடக்கிப் பாடக் கேட்கின்றனர். காளமேகம் உடனே கவிதை மழை பொழிந்தார்.

"சிறுவ னளைபயிறு செந்நெற் கடுகு
மறிதிகிரி தண்டு மணிநூல்—பொறியரவம்
வெற்றேறு புள்ளன்னம் வேதனரன் மாலுக்குக்
கற்றூமும் பூவே கறி."

என ஒரு வெண்பாவினுள் இருபத்தொரு பொருள்கள் அமையப் பாடுவது அரிதேயாகும்.

எழுத்தைக் குறித்துப் பாடச் சொல்லுதல், ஆசு கவியிலே இன்னொரு வகை. ஒருவர் காளமேகத்தைச் சே, கா, மா, ஏ, வா, தா என்னும் எழுத்துக்கள் தொடர்ந்து வரப் பாடச் சொல்கிறார். இன்னொருவர், ஐந்து 'டு' வரப் பாடவேண்டுமென்கிறார். வல்லின எழுத்துக்களாலும், இடையின எழுத்துக்களாலும், தனித்தனி பாடல்களை வேண்டுகின்றனர். ககர இன எழுத்துக்கள் மட்டும்

அமைந்து வரக் காளமேகம் பாடிய "காக்கைக் காகா கூகை, கூகைக் காகா காக்கை" என்று தொடங்கும் செய்யுளில் ககர இன எழுத்துக்கள் மட்டுமே அமைந்திருக்கக் காண்கிறோம்.

ஆசு கவியில் இன்னொரு வகை, ஈற்றடி கொடுத்துப் பாடச் சொல்லுதல். இவ்வழக்கே ஆசு கவி வகையில் மிகுதியாய் அமைந்துள்ளதென்னலாம்.

'பொன்னு வரையிலேகாய் பூ'

'தைம்மாசி பங்குனிமா தம்'

என்பன போன்று விரும்பிய தொடர் ஈற்றிலே வரக் காளமேகம் பாடியுள்ளார்.

'குடத்திலே கங்கையடங் கும்' என்னும் ஈற்றடியை ஏற்றுப் பாடிய பாட்டுக் காளமேகத்தின் பெருமைக்கு அருமையான எடுத்துக்காட்டு. கங்கையானது விண்ணுலகிலும் மண்ணுலகிலும் கயிலை மலையிலும் பாய்வதோடமையால், பெருகி வந்த போது, மங்கையொரு பங்கராகிய ஈசனர் அதைத் தமது சடா மகுடத்திலே—அதாவது, சடை முடியாகிய கிரீடத்துள்ளே—அடக்கிக்கொண்டார் எனச் சொல்லழகும் பொருளழகும் ததும்பப் பாடுகின்றார்.

"விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும்—பெண்ணை
இடத்திலே வைத்த இறைவர் சடாம
குடத்திலே கங்கையடங் கும்."

என்பது பாட்டு. அணி நயந்தோன்ற ஆசு கவி பாடுதல் இன்னொரு வகை. தொடர்பில்லாத இரு பொருள்களைக்

கூறிச் சிலேடை நயந்தோன்றப் பாடும்படி கேட்பார்கள். ஆசு கவி பாடுவோன் ஒன்று சேராத பொருள்களையும் தனது புலமைப் பசையால் ஒட்டவைக்கவேண்டும். பாம்புக்கும் எள்ளுக்கும், துப்பாக்கிக்கும் ஓலைச் சுருளுக்கும், பூசணிக் காய்க்கும் பரமசிவனுக்கும், மதிக்கும் மலைக்கும், முகுந்தனுக்கும் முறத்துக்கும், மீனுக்கும் பேனுக்கும், கண்ணாடிக்கும் காவலனுக்கும் என்றிவ்வாறு சிலேடை நயந்தோன்றக் காளமேகம் பாடியுள்ள பாக்கள் பல. வைக்கோலுக்கும் யானைக்கும் சிலேடை பாடும்போது,

> "வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
> போரிற் சிறந்து பொலிவாகும்"

என்னும் தொடர், இரு பொருளுக்கும் பொருந்தக் காண்கிறோம். வைக்கோலானது, வயலிலிருந்து எடுக்கப்பட்டு நெற்களத்திலிட்டுத் துவைக்கப்படும்; பின்பு புரியாகத் திரிக்கப்பட்டு நெற்கோட்டையைச் சூழ்ந்திருக்கும்; இறுதியில் பெரிய குவியலாகக் குவிக்கப்பட்டு மலை போல உயர்ந்து விளங்கும். யானையோ, போர்க்களத்தில் சேனைகளை நிலத்தில் தாக்கிக் கொல்லும்; போர் முடிந்த பின் மன்னனின் கோட்டைக்குள்ளே புகும். சண்டை செய்வதில் சிறந்து பிற படைகளைவிட மேன்மையடையும்.

இவ்வாறு, பல வகைப்பட்ட ஆசுகவிகளில் ஒன்றிற்கு மேற்பட்ட விதிகள் அடங்கப் பாடுதல் ஆசுகவியின் சிறப்பினை உயர்த்துவதாகும். காளமேகத்தின் ஒரு கவியானது பொருளையும், சொல்லையும் ஏற்றுப் பாடப்பட்டதாய் அமைந்துள்ளது. இராசிகளின் பெயரும், முறையும், தொகையும் அடைமொழியின்றி ஒரு வெண்பாவிலமைப்பதுடன், 'பகருங்கால்' என்று தொடங்கி, 'இராசி வளம்'

என்று முடியப் பாடவேண்டுமெனக் கூறியதற்குக் காளமேகம் உடனே பாடி முடிக்கக் காண்கிறேம்.

பிறரால் கூறப்படும் சமத்திக்கொப்பப் பாடுவதே மிகவும் கடிதாயிருக்கும்போது, அதில் நகைச்சுவை, பொருள் நயம், ஓசை நயம் முதலியன பொருந்தப் பாடுதல் அரிதேயாகும். அவ்வாறு பாடுதல் புலவர்களின் பெருமையை விளக்கும். 'குரங்கென்று' தொடங்கி, 'இடம்' என்று முடிக்கக் கவிஞரைக் கேட்டபோது, கவிஞர் ஓர் ஓவியமே தீட்டிவிடுகிருர். இயல்பாகவே குறும்புக் குணம் மிகுந்த குரங்கொன்று நெருப்பிலே வீழ்கிறது. உடனே பித்துப் பிடித்துவிடுகிறது. இந்நிலையில் அதைத் தேள் கொட்டுகிறது. போதாக் குறைக்குப் பாம்பொன்று அதன் கையிலே சுற்றிக்கொள்கிறது. அதன் காலினை நண்டு கௌவிப் பிடிக்கிறது. இதற்கப்பால் பேயும் பிடிக்கிறது. பின்னர்க் குரங்கு கள்ளைக் குடிக்கிறது. இறுதியில் பச்சை மிளகையும் கடிக்கிறது. இதோ பாட்டு :

" குரங்கனலில் வீழ்ந்து,வெறி கொண்டு,தேள் கொட்டக்
கரஞ்செறியப் பாம்பு,அலவன் கௌவ,—விரைந்துபேய்
பற்றவே, கள்ளுண்டு பச்சைமிள கைக்கடித்தால்
எத்தனைபார் சேட்டைக் கிடம்!"

ஒன்று முதல் பதினெட்டு வரை ஒரு வெண்பாவில் அமைக்கச் சொன்னல், புலவன் திறத்தைக் காட்டுவதற்கு இடமில்லாமற்போகிறது. ஒன்றிரண்டு மூன்றென்றே அடுக்கி முடிக்க வேண்டும். ஆனல், போதிய இடம் கிடைக்கும் போது ஆசு கவியாயிருந்தாற்கூட நயஞ் செறிந்து விளங்குகிறது.

"சங்கரற்கு மாறுதலை சண்முகற்கு மாறுதலை
ஐங்கரற்கு மாறுதலை யானதே—சங்கைப்
பிடித்தோர்க்கு மாறுதலை பித்தா! நின் பாதம்
படித்தோர்க்கு மாறுதலை பார்."

என்னும் ஆசு கவியில் சிவன், முருகன், விநாயகன், திருமால், சிவனடியார் எல்லோருக்கும் 'ஆறு தலை' அமைக்கின்றார் ஆசிரியர். சங்கரனாகிய சிவனுக்கு ஆறு தலை; அதாவது, ஆறாகிய கங்கை தலையிலிருக்கிறாள். சண்முகனாகிய முருகன் தலைகளின் எண்ணிக்கையே ஆறு. ஐந்து கைகளையுடைய விநாயகனுக்கும் ஆறு தலை; அதாவது, வழிகளிலெல்லாம் கோயில். சங்கைப் பிடித்திருக்கும் திருமாலுக்கும் ஆறு தலையில்—அதாவது, இரு ஆறுகளுக்கிடையில், திருவரங்கத்தில்—இருப்பிடம் உண்டு. இறைவனடியைப் போற்றுவோர்க்கும் ஆறுதலை; அதாவது, மனத்துயர் ஆறுகிறது. இதே கருத்து, சதாவதானி சேகுத்தம்பிப் பாவலரவர்களின் ஆசு கவியொன்றில் திட்பமும், நுட்பமும், ஓசை நயமும் செறிந்திலங்கக் காண்கிறோம்.

"சிரமா றுடையான் செழுமா வடியைத்
திரமா நினைவார்; சிரமே பணிவார்;
பரமா தரவா பருகா ருருகார்;
வரமா தவமே மலிவார் பொலிவார்."

இச்செய்யுளிலுள்ள 'சிரமாறுடையான்' என்னும் தொடர், கங்கையாற்றினைச் சிரத்திலேயுடைய சிவனையும், ஆறு சிரங்களையுடைய முருகனையும், மாறுபட்ட சிரத்தினையுடைய விநாயகனையும், ஆற்றிலே சிரத்தையுடைய திருமாலையும், தலையாய நெறியினைக் காட்டும் முழுமுதற்கடவுளையும் குறிக்கும் நயம் சுவைத்து மகிழ்தற்குரியது.

ஔவையார், கம்பர், புகழேந்தியார், ஒட்டக்கூத்தர், பொய்யாமொழிப் புலவர், அந்தகக்கவி வீரராகவர் போன்ற புலவர் மணிகளின் வாழ்க்கைக் குறிப்புக்களும், அவர்களுடைய பாடல் தொகுதிகளும் அவர்தம் ஆசு கவி யாற்றலைப் பறை சாற்றுகின்றன.

அரிகண்டம், கண்ட சுத்தி, அவதானம் போன்ற துறைகளுக்கு ஆசு கவியாற்றலே அடிப்படையெனக் கூறு தல் தவருகாது. 'அரிகண்டம்' என்பது, கழுத்திலே கத்தி மாட்டிக்கொண்டு பாடுவது. 'கண்ட சுத்தி' என் பது, ஒருவர் சமிக்கை கொடுக்க, காணுத அச்செய்தியைத் தான் கண்டதாகப் புலவன் பாட்டில் அமைத்துக் கூறுவது. 'அவதானம்' என்பதோ, வியத்தற்குரிய தோர் ஒப்பற்ற கலை. சதாவதானி சேகுத் தம்பிப் பாவலரவர்கள் சென்னையிலே அவதானம் செய்யும்போது அவர்களது ஆசு கவிப் புலமையை நோக்கி அறிஞ ருலகம் வியந்தது. அவர்களுக்கு அளிக்கப்பட்ட ஈற்றடி களிலே, "விராடனையே பெண்ணெனலா மே," என் பதும் ஒன்று. விராடன் என்பவன் மச்சநாட்டதிபதி; உத்தரையின் தந்தை. அவனைப் பெண்ணுக்கச் சொல் கின்றனர் சோதனையாளர். புடம்போட்ட புலமை வாய்க்கப் பெற்ற பாவலரின் ஆற்றல், விராடனைப் பெண்ணுக்கிக் காட்டிற்று :

"உண்ணும் பொழுதும் உறங்கும் பொழுதுமொன்றை
எண்ணும் பொழுதும் எரிமுன்னய்—மண்ணில்
வராடவனை யேதெய்வம் மன்னெனும் சொற்ற
விராடனையே பெண்ணெனலா மே."

என்பது பாட்டு.

இங்குப் பெண்ணென்ற சொல்லுக்கு இலக்கணம் கூறு கின்றார் பாவலர். உண்ணும் போதும், உறங்கும் போதும், சிந்தனையின் போதுமாவது ஒருவன் அமைதி யாக இருக்க வேண்டும். அப்போதுகூட வெகுளிக் கனல் தெறிக்க வாழ்கிறான் ஒருவன். அவனைக் கணவ னாகக் கொள்கிறாள் ஒருத்தி. அவள் அவனையே தெய்வ மென்றும் மன்னனென்றும் போற்ற வேண்டும். அவன் சொல்லைத் தட்டாமல்—தவிராமல்—வாழ வேண்டும். அவளைத்தான், 'பெண்' என்று சொல்லலாம். அதா வது, 'சொல் தவிராள்தனையே, பெண் எனலாம்.' சொல்—தவிராள்—தனையே என்பது புணர்ந்து 'சொற்ற விராடனையே' என்றாயிற்று; விராடனும் பெண்ணாயினான்!

இன்று, ஆசு கவி பாடும் புலவர்களின் எண்ணிக்கை அருகிக்கொண்டே வருகிறது. ஆனால், ஆசு கவி அப் படியே மறைந்துவிட்டதெனக் கூற முடியாது. புதுமைக் கவிஞர் பாரதியார் இளமையிலேயே ஆசு கவி பாடும் ஆற் றலைப் பெற்றிருந்தார். அவரது புலமையைக் கண்டு புழுங்கிய ஆசிரியர் காந்திமதிநாதன், மாணவர் பாரதி யாரை அருகழைத்து, "பாரதி சின்னப் பயல்" என்னும் தொடர் ஈற்றிலே வரச் செய்யுளியற்றச் சொன்னார். அஞ்சா நெஞ்சமும், தன்மான உணர்வும் மிகுந்த பாரதி யாரும், ஆசிரியருக்குத் தக்க முறையிலே சூடு கொடுத் தார். "காந்திமதி நாதனைப் பார்! அதி சின்னப் பயல்!" என்று செய்யுளை முடித்தார். இறுதித் தொடர், ஆசிரியர் கூறியதற்கிணங்க, 'பாரதி சின்னப் பயல்' என்றே அமைந் தது. ஆனால், மாணவர் பாரதியார், ஆசிரியருக்குக் கற்பித்த பாடமும் அதிலே அடங்கியுள்ளது.

# 7. சீட்டுக்கவி

திருமுகம் தீட்டுவது ஒரு தனிக்கலை. இன்று இக்கலை நல்ல முறையில் வளர்ச்சியடைந்துள்ளது. கடிதங்களைக் கருவியாகக் கொண்டு, அகன்றிருப்போர் அறிந்துகொள்ள வேண்டிய செய்திகளை வெளியிடுகின்றோம். நண்பர்கள் அன்புடன் அளவளாவும் கடிதங்கள், காதலர்கள் கனிமொழி பேசும் கடிதங்கள், உள்ளத்தைத் தொடுகின்ற வள்ளல்களைப் பாராட்டி வரைகின்ற கடிதங்கள், பகைவரிடமிருந்து படையெடுத்து வருகின்ற கையெழுத்தில்லாக் கடிதங்கள், வணிகக் கடிதங்கள், அலுவலகக் கடிதங்கள் எனக் கடித வகைகளை அடுக்கிக் கொண்டே போகலாம். 'ஆசிரியருக்குக் கடிதங்கள்', 'திறந்த திருமுகம்', 'போடாத தபால்', 'சேராத அஞ்சல்' போன்றவை பத்திரிகைகள் வழிப் பல வாசகர்களின் கருத்துக்களைக் கவர்ந்து வருகின்றன. சிறந்த ஆசிரியர்கள் எழுதுகின்ற கடிதங்கள் சில வேளைகளில் எதிர்பாராத முறையில் இலக்கியத்தின் ஒரு பகுதியாகவே அமைந்துவிடுகின்றன. தாமஸ் கார்லைல், வில்லியம் கௌப்பர், பைரன், மெக்காலே, ஜான்ஸன் ஆகியோர் தங்கள் உற்றார் உறவினர்களுக்கு எழுதிய ஆங்கிலக் கடிதங்கள், இன்று மற்றோர் கருத்துக்கும் விருந்தளிக்கின்றன. தாய் நாட்டின் தளையவிழ்க்கப் போராடிய நமது நாட்டின் நல்லமைச்சர் நேரு சிறையிலிருந்து கொண்டு தம் புதல்வியாருக்கெழுதிய கடிதங்கள், இன்று வரலாற்றுக்கே வனப்பூட்டுவனவாய் அமைந்துள்ளன.

தமிழ் இலக்கியக் கடலில் செய்யுளுருவிலே அமைந்திருக்கும் கடிதங்களைத்தான் சீட்டுக்கவி என்று வழங்கி வருகிறோம்.

நந்தமிழ் நாட்டின் செந்தமிழ் இலக்கியங்கள் பல்வேறு பண்புடையனவாய்ப் பாற்கடல் போலப் பரந்து கிடக்கின்றன. மங்காத புகழ் படைத்த சங்க காலத்திலே வாழ்ந்த புலவர் பெருமக்களின் கருத்துக் களஞ்சியமெனத்தகும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, நாலடி, நான்மணி தொடங்கிய விழுமிய கருவூலங்களாகிய கீழ்க்கணக்கு நூல்கள் ; நெஞ்சையள்ளும் செஞ்சொல் ஓவியங்களாகிய ஐம்பெருங்காப்பியங்கள் ; சிந்தையைக் கவரும் சிறு காப்பியங்கள் ; கம்பர், சேக்கிழார், வில்லி, கச்சியப்பர், உமறுப் புலவர், வீரமா முனிவர் ஆகியோர் அளித்துள்ள பெருநூல்கள் ; பதினெண் சித்தர்களின் பைந்தமிழ்ப் பாடல்கள் ; சைவ நெறி தழைக்க நாயன்மார்கள் பாடிய தேவார திருவாசகங்கள் ; வைணவம் துலங்க ஆழ்வார்கள் அருளிச்செய்த பாசுரங்கள் ; பிற்காலத்திலெழுந்த பிரபந்த வகைகள், தல புராணங்கள்— இவைகளெல்லாம் தமிழிலக்கியப் பெருங்கடலிற் பாய்கின்ற பேராறுகளென்று கூறுதல் வேண்டும். இவைகளன்றி, ஆங்காங்கே வந்து கலக்கின்ற கிளையாறுகளையும் நாம் ஒதுக்கிவிடுதல் கூடாது. தங்களுக்குரிய சில சூழ்நிலைகளிலிருந்துகொண்டு, தக்க புலவர்கள் இயற்றுகின்ற தனிப்பாடல்கள், போட்டிகளின்போது புகழை நாட்டுவதற்காகப் புகல்கின்ற செய்யுட்கள், அன்பர்களின் வேண்டுகோளையொட்டிப் பாடுகின்ற பாக்கள், செய்யுளுருவிலே எழுதும் கடிதங்கள், பிறர் நூலுக்கு மதிப்புரையாக வழங்குகின்ற சாற்றுக் கவிகள், உள்ளத்

தில் இடம் பெற்றவர்களின் மறைவுக்காக மனமுருகிப் பாடுகின்ற சரம கவிகள் ஆகியவற்றைத் தமிழிலக்கியத் திற் காணக்கிடக்கும் சில்வகைக் கவிகளாகக் கருது கின்றோம்.

இவற்றுள் சீட்டுக்கவிகளில் நமது சிந்தனையைச் சிறிது திருப்புவோம் : புலவர்கள், தங்களை அறிமுகம் செய்துகொள்வதற்கும், வள்ளல்களிடமிருந்து தேவை யான பொருள்களைப் பெற்றுக்கொள்வதற்கும், பிறரைப் பாராட்டுவதற்கும், செய்தி அறிவிப்பதற்கும் செய்யுளுரு விலே முடங்கல் வரைந்து வந்தார்கள். அவற்றைத்தான் சீட்டுக்கவியென்றும், ஓலைத் தூக்கென்றும், ஓலைப் பாசுர மென்றும் கூறி வருகின்றோம். சீட்டிலோ, ஓலையிலோ எழுதப்படுகின்ற செய்யுள் இப்பெயர்களைப் பெறுதல் பொருத்தந்தானே! தற்புகழ்ச்சி குற்றமாகாத நான்கு இடங்களைக் குறிப்பிடப் புகுந்த நன்னூல் ஆசிரியர் பவ ணந்தி முனிவர், 'மன்னுடை மன்றத்து ஓலைத்தூக்கி னும்' என்னும் தொடரால் அரசனது அவைக்கு எழுது கின்ற சீட்டுக் கவியில் 'ஒரு புலவன் தன்னைப் புகழ்தல் தகும்' எனக் கூறுவதிலிருந்து, மன்னர்களின் அவைக் களத்தில் தங்களை அறிமுகம் செய்துகொள்வதற்காகப் புலவர்கள் சீட்டுக்கவி எழுதும் வழக்கத்தை மேற்கொண் டிருந்தார்கள் என்பதை அறிய முடிகிறது. இச்சீட்டுக் கவிகள் தோன்றத்தொடங்கிய காலத்தின் தன்மையை நாம் முதன்முதலில் தெரிந்துகொள்ளுதல் வேண்டும். பழந்தமிழ்க் கவிஞர்களின் பண்புகளெல்லாம் அருகிப் போய், ஏட்டளவிலே நின்றுவிட்டன. புலவர்களிடையே போட்டியும் பொறாமையும் பெருகிக்கிடந்தன. பொது

மக்கள் பொருட்சிறப்பிலே கருத்தைச் செலுத்தாது, சொல்லாரவாரத்திலே சொக்கிக் கிடந்தார்கள். சித்திர கவிகளும் சிலேடைகளும் செல்வாக்குப் பெற்றிருந்தன. கழுத்திலே கத்தி மாட்டிக்கொண்டு அரிகண்டம் பாடுவதிலும், கொதிக்கும் கொப்பரைக்கு மேலிருந்துகொண்டு யமகண்டம் பாடுவதிலும் புலவர்கள் முனைந்து நின்றார்கள். இக்காலத்திலேதான் சீட்டுக் கவிகளின் தோற்றத்தைக் காண்கிறோம்.

கி. பி. பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த கவி காளமேகத்தை அனைவருமறிவர். ‘இம்மென்னு முன்னே எழுநூறும் எண்ணூறும், அம்மென்றால் ஆயிரம் பாட்டாகாதோ ?’ எனச் சங்கநாதஞ்செய்த சண்டமாருதம் இவர். திருமலைராயன் பட்டினத்திலே அரசவைக் கவிஞர் அதிமதுர கவிக்குத் தம்மை அறிமுகஞ் செய்துகொள்வதற்காக ஒரு சீட்டுக்கவி வரைந்தனுப்புகிறார் காளமேகம். ஐந்து நாழிகையிலே ஒரு தூதும், ஆறு நாழிகையிலே ஒரு சொற்சந்தமாலையும், ஏழு நாழிகையிலே ஓர் அந்தாதியும், பத்து நாழிகையிலே மடலும் கோவையும், ஒரு நாளிலே ஒரு பரணியும், இரண்டு நாட்களிலே பாரகாவியங்களும் பகர்ந்து கொடி கட்டியதாகத் தமது ஆற்றலை அச்சீட்டுக்கவியில் அறிவிப்பதுடன் அமையாது,

‘சீதஞ்செ யுந்திங்கள் மரபினான் நீடுபுகழ்
செய்யதிரு மலைராயன்முன்
சீறுமா றுகவே தாறுமா றுகள்சொல்
திருட்டுக் கவிப்புலவரைக்

காதங் கறுத்துச் சவுக்கிட் டடித்துக்
கதுப்பிற் புடைத்துவெற்றிக்
கல்லணையி னெடுகொடிய கடிவாள மிட்டேறு
கவிகாள மேகநானே !''

எனக் கூறுவது, கவிஞர் 'சவாரியிலே' காளமேகங் காட்டுகின்ற ஆர்வத்தை மட்டுமன்றிச் சீட்டுக்கவிகளின் தன்மையையும் படம் பிடித்துக் காட்டுகிறது. இதற்குப் பின்னர் ஒவ்வொரு நூற்றாண்டிலும் வாழ்ந்த புலவர்கள் எழுதியுள்ள பல வகைப்பட்ட சீட்டுக்கவிகளைப் பார்க்க முடிகிறது.

இன்று நாம் எழுதுகின்ற கடிதங்களில், முதலில் பெறுவோரை அழைக்கின்ற விளியும், பின்னர் அவர் அறிந்துகொள்ள வேண்டிய செய்தி விளக்கமும், இறுதியில் அனுப்புவோர் பெயரும் அமைந்திருக்கும். ஆனால், சீட்டுக்கவிகளில் இம்முறை மாறுபட்டிருக்கும். தொடக்கத்தில் அனுப்புவோர் பெயரும், அதைத் தொடர்ந்து பெறுவோர் பெயரும், இறுதியில் செய்தியும் இடம் பெற்றிருக்கும். மேலும், முதல் இரு பகுதிகளும் மிக விரிவாகவும் செய்திப் பகுதி சுருக்கமாகவும் அமைந்திருக்கும். 'குட்டிப் புலவர்கள்' கூட, தங்கள் பெயரை எழுதும்போது, தாரணியில் தங்களுக்கு நிகர் யாருமில்லை என்று குறிக்கத் தவறுவதில்லை. அஷ்டாவதானம் சரவணப் பெருமாட் கவிராயர் தம்மைப்பற்றித் தாமே கூறுகின்ற ஒரு பகுதியைப் பார்ப்போம்:

"கல்விச் சமுத்திரம், கமலாலயம், தமிழ்க்கடல் மடை திறந்த வெள்ளம், கற்பனை பிறப்பிடம், கலைமகள் இருப்பிடம், கவிமாரி பொழியுமேகம், சொல் விற்பனம் விளையும் மதுரக் களஞ்சியம், தோன்று கற்பூர தீபம், சுகிர்தகுண அவதானி................"

"நாவலருக்குள்ளொரு நடுநாயகம், புவியில் ராஜ ராஜர்க்கு மகுடம், சகல கலை ஞாபகம், பூவில் விலை மதியாத மாணிக்கம், மாற்றேறுங்கு தங்கம், நாற்கவி விலாசம், மெய்ப்புத்தமுது அடைத்த கும்பம், பிரபந்த மேகம், தமிழ்க் குஞ்சரம், கவிராஜ சிங்கம், இந்துச் சமுத்திரம், தமிழ்ப் பொக்கிஷம், சோதிப் பிரகாசம்" என்றிவ்வாறு அடுக்கிச் செல்கிறார். தம்மை அறிமுகஞ் செய்கின்ற தருணத்தில் இவ்வாறு பெருமிதமடைந்த புலவர், தம் ஆசிரியரை நினைக்கும் போது அப்படியே அடங்கியொடுங்கிவிடுகிறார். தமது ஓலைத் தூக்கு ஒவ்வொன்றிலும் நன்றி நிறைந்த நெஞ்சத்துடன் தம் ஆசிரியரைப் பாராட்டுகின்றார். 'சோமசுந்தரசுவாமி தாசன்', 'சோமசுந்தர குருவின் அருளொன்றுமடிமை', 'சோமசுந்தர குரு கடாட்ச வீட்சண விலாசன்', 'சோமசுந்தரகுரு சுவாமி அடிமைக்கு மடிமைக்குமடிமை' என்று பணிவன்புடன் பலவிடங்களில் பகர்வது குறிப்பிடத் தக்கது. மாம்பழக் கவிச் சிங்க நாவலர், சேலம் ஜில்லா முத்தபுரி சம்ஸ்தானம் ஜமீந்தாரிணியவர்களுக்குச் சீட்டுக்கவி வாயிலாகத் தம்மை அறிமுகம் செய்துகொள்கிறார் :

" தர்க்கமிடுவோர் பற்களைப் பொடியாய்த்
தகர்க்கின்ற வஜ்ராயுதம்,
சண்டாளரைப் பிளக்குங் கண்ட கோடாலி"

என மெல்லியலாரிடத்தே இவ்வாறு வல்லமையைக் காட்டும் போது, தம் பாலாருக்கு எவ்வாறுரைப்பார்களென்பதை உணர்ந்துகொள்ள முடிகிறது.

தங்களைப் பற்றியே பாவலர்கள் இவ்வாறு பகரும் போது, தாங்கள் நாடிச் செல்கின்ற காவலர்களுக்கு எத்தகைய புகழ் மாலையைப் புனைவார்கள் என்பதைச்

சொல்லவும் வேண்டுமோ? சென்ற நூற்றுண்டின் இறுதியில் வியாசர்பாடி என்னுமிடத்தில் விநாயக முதலியார் என்னும் பெயர் பூண்ட வள்ளலொருவர் தோன்றினர். அவர் தகுதியான தமிழறிவும், மிகுதியான நல்லியல்புகளும் வாய்க்கப் பெற்றவர். தமிழ்ப் புலவர்களின் தகுதியறிந்து தக்க முறையில் பரிசளித்துப் பாராட்டி வந்திருக்கிருர். இராமநாதபுரம் சம்ஸ்தானப் புலவர்கள் அவரைப் புகழ்ந்து போற்றியுள்ள சீட்டுக்கவிகள் பல. அழகிலே மாரனென்றும், வாய்மையிலே அரிச்சந்திரனென்றும், செல்வத்திலே குபேரனென்றும் புகழ்வதோடமையாமல், முதலியார் சென்னைமா நகரத்தில் வாழ்வதையும் பெருஞ் சிறப்பாகப் பலரும் கொள்வது குறிப்பிடத் தக்கதாகும்.

சீட்டுக்கவிகளின் மூன்ருவது பகுதிதான் செய்தி விளக்கம். சிலர் இப்பகுதியைச் சுருக்கமாக அமைத்து விடுகின்றனர். வேறு சிலர், வள்ளல்களுக்கு விடுக்கும் வேண்டுகோளை வெளிப்படையாகச் சொல்லாமல், குறிப்பு மொழிகளால் உணர்த்துகின்றனர். அஷ்டாவதானம் சரவணப்பெருமாட்கவிராயருக்குச் சென்னை செல்வதற்காகப் பொருள் தேவையுண்டாயிற்று. அவர் தமக்கு இருபது லட்சம் வராகன் அனுப்பி வைக்கும்படி முகம்மது தம்பி என்பாருக்குத் தமது கருத்தை வெளியிடுகிருர்:

“ உவ்வொன்று, யவ்வொன்று
லவ்வொன்று டவ்வொன்று
சவ்வொன்று மவ்வொன்று
வவ்வொன்று, ரவ்வொன்று
கவ்வொன்று, னவ்வொன்று,
வரவிடல் வேண்டுமே.”

என்பது அவர் குறிப்பு.

அந்தகக்கவி வீரராகவ முதலியார் பதினேழாம் நூற்ருண்டிலே வாழ்ந்த புலவர்; சீட்டுக்கவி பாடுவதிலே சிறந்தவரென நிரஞ்சன கவிராயரால் புகழ்ந்து பாராட்டப்பட்டவர் ; புறக்கண்ணிழப்பினும் அகக்கண் பெற்று, 'ஏடாயிரங்கோடி எழுதாது, தம் மனத்தெழுதிப் படித்த விரகர்'. தமக்கு ஒகு குதிரை வேண்டுமென்ற கருத்தை இவர் செழியதரையான் என்பானுக்குத் தெரிவிக்கிருர் :

"பாடாத கந்தருவம், எறியாத கந்துகம்,
பற்றிக்கொலாதகோணம்,
பறவாத கொக்கு,அனற் பண்ணுத கோடை,வெம்
படையிற்ருெடாதகுந்தம்,
சூடாத பாடலம், பூவாத மாவொடு
தொடுத்துமுடி யாதசடிலம்,
சொன்னசொற் சொல்லாத கிள்ளையொன்று எங்குந்
துதிக்கவர விடவேண்டுமே."

இந்தப் பாட்டுக்காகவாவது பரிமாவொன்று பரிசளிக்க வேண்டுவதுதானே !

இடைக்காலத்திலே மணிப் பிரவாள நடையைக் கையாள்வதிலே கவிராயர்கள் காட்டிய அளவற்ற ஆர்வம், அவர்கள் எழுதிய சீட்டுக்கவிகளிலும் எதிரொலித்து நிற்கிறது. அவர்கள் தங்களது வடமொழித் திறமையைத் தமிழ்க் கவிகளிற் காட்டுவதைத் தனிச்சிறப்பாகக் கருதினுர்களென நினைப்பது தவருகாது. கவிராயரொருவரின் சீட்டுக்கவி காட்டும் மணிப்பிரவாள நடையை நோக்குவோம் :

" தனகனக வாகனவி னேதசர் வக்ஞான
சாம்ப்ராச்ய, சார்வபூமன்,
சற்புத்ர, சன்மார்க்க, சத்ப்ரபல, சற்சுகிர்த
சத்சிநே கப்ரதாபன்,
சகலகுண சம்பன, சிரோரத்ன முக்யபுனி
தப்ரதான, சிரேஷ்டன்,
சுகார்திக சுஜாதிக சுநாகர சுயாமக
சுபாகசற் புருஷரத்னம்,
சுதந்தர சுமங்கல சுரஞ்சித சுமந்திர
சுயம்ப்ரகா சப்ரதாபம்
சுபந்திர சுலட்சண சுகற்புத சுசற்சன
சுகப்ரபல ரத்நாகரம் "

என்றெழுதும்போது வடமொழிச் சொற்களை ஒட்டவைக்கும் பசையாகத் தமிழ் பயன்படுத்தப்பட்டிருப்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

சில சீட்டுக்கவிகளில் புலவர்களின் கற்பனையுள்ளத்தைக் காண முடிகிறது. ஒருவர் தம்மையொரு யானைக்கும், முத்தமிழை மும்மதத்திற்கும், எழுத்தாணியைக் கொம்புக்கும், நன்னூல்களைக் கச்சுக்கும், ஆசிரியரைப் பாகனுக்கும் ஒப்பிட்டுக் காட்டுந்திறம் சுவைத்தின்புறத் தக்கது. சென்னை மாநகரின் சிறப்பைக் கூறப் புகுந்த ஒருவர், ஐந்து திணைகளிலுமுண்டாகின்ற செல்வங்களனைத்தையும் ஓரிடத்துச் சேர்ப்பதற்காகத்தான் நான்முகன் இம்மாநகரை ஆக்கியுள்ளானெனச் சொல்கிறார். சில இடங்களில் புலவர்கள் மேற்கொள்ளும் சந்தங்கள் சலிப்பைப் போக்க உதவுகின்றன.

" தமிழ்க்கடன் மடைப்புனல் திறக்குமதெனக்கனி
சருக்கரைபொ ரப்பகருவோன்
வடக்கொடு குடக்கொடு கிழக்கொடு திசைப்புற
மணந்திடு புகழ்ப்ரதாபன்
வடித்திடு மிலக்கண விலக்கிய வகைக்கொரு
மலைக்குருமு னிக்குநிகர்வான் "

என்று கூறும்போது ஓசையால் உள்ளமும் துள்ளுகிற தல்லவா ?

புலவர்கள் மட்டுமன்றி, புலமைச் செல்வியர்கூடச் சீட்டுக்கவி தீட்டியிருக்கின்றனர். திருக்கண்ணபுரத்துப் பெண்ணொருத்தி முனையதரையனென்ற அரசனுக்கு வெண்பா வடிவில் வரைந்த சீட்டுக்கவியொன்றன் முற் பகுதி நயம்பட அமைந்துள்ளது :

" இன்றுவரி லென்னுயிரை நீபெறுவை யின்றைக்கு
நின்று வரிலதுவு நீயறிவை"

ஒருவர் கடிதத்தால்பெற்ற மகிழ்ச்சியைக்கூடச் சீட்டுக் கவியிலே சொல்வதுண்டு. காரைக்கால் தனக்கோடி முதலியாரிடமிருந்து தாம் பெற்ற கடிதத்தாலுண்டான மகிழ்ச்சியை வேதநாயகம்பிள்ளை கடிதம் வாயிலாக வெளி யிடுகின்றார் :

" இத்தலம் போற்றும் தனக்கோடி பூபநின் னின்கடிதம்
கைத்தல மேந்தி விழித்தல மொத்திக் கனசிரமாம்
அத்தலஞ் சூடி யகத்தலம் பூரித் தரசுரிமை
முத்தலம் பெற்றவர் போலே சுகக்கடன் மூழ்கினனே !"

வசன நடை வளம்பெறத் தொடங்கிய சென்ற நூற் றாண்டிலே எழுதப்பட்ட சீட்டுக்கவிகள் பழைய மரபுகளி லிருந்து ஓரளவு மாறுபட்டிருக்கக் காண்கிறோம். மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை போன்றோர் உரை

நடையிலே முடங்கலெழுதத் தொடங்குதற்கு முன்னர், கடிதத் தலைப்பிலே ஒரு செய்யுளமைக்கும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர். அவர் மாணவர் உ. வே. சாமி நாதையரும் அவரைப் பின்பற்றியுள்ளார். ஐயரவர்கட்கும் வித்துவான் தியாகராச செட்டியாரவர்கட்குமிடையே நடந்த கடிதப் போக்கு வரத்துக்களிற் பல சுவையூறும் செய்யுட்கள் பிறந்திருக்கின்றன. நாஞ்சில் நாட்டிலுள்ள கோட்டாற்றில் வாழ்ந்த கணபதி ஆச்சாரி அவர்கட்குப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் எழுதிய கவிக் கடித மொன்று சீட்டுக் கவியின் அமைப்பிலும் நடையிலும் பிற் காலத்தில் ஏற்பட்ட மாற்றத்தை எடுத்துக் காட்டுகிறது :

"கடல்சூழ் புவிக்குக் கருது நான் கெல்லையில்
இடம்பெறு தென்றிசைக் கெல்லையா யிருந்த
நுமது நாட்டுக் குமரிக் கோடிபோல்
நீவிரும் தமிழ்க்கோர் நிலைபெறும் எல்லையே
ஆவி ரென்ப; ஆயினும் குமரிக்
கோடி கோடியே; நீயிரோ, கோட்டமில் ஏகர்;
முன்னோர் புகழும் மும்முடிச் சோழ
நல்லூர் என்னும் நும்மூர் மான
முத்தமிழ்க் குரிய மும்முடி நுமக்கே
ஒத்ததா மென்ப; ஆயினும் நும்மூர்
குடபால் செல்லும் கோட்டா றுடைத்து—நீரோ,
குணபால் செல்லும் கோடா ஆற்றர்."

பாரதியாரின் சீட்டுக்கவிகளும், அவர்தம் ஏனைய எழுத்தோவியங்களைப் போலவே எளியமுறையில் அமைந் திருக்கின்றன. எட்டயபுரம் மன்னர் வெங்கடேசு ரெட் டப்ப பூபதிக்குப் பாரதியார் வரைந்தனுப்பிய ஓலைத் தூக் கின் ஒரு பகுதியைக் காண்போம் :

"பாரிவாழ்ந் திருந்த சீர்த்திப் பழந்தமிழ் நாட்டின் கண்ணே
ஆரிய நீஇந் நாளில் அரசுவீற் றிருக்கின் றுயால்
காரியங் கருதி நின்னைக் கவிஞர்கள் காண வேண்டில்
நேரிலப் போதே எய்தி வழிபட நினைக்கி லாயோ ?"

நாஞ்சிலளித்த நாவலர் பெருமான் சதாவதானி சேகுத் தம்பிப் பாவலரவர்கள் ஒரு தமிழ்க் கடலாய்த் திகழ்ந்தவர். அவர்தம் பாடல்களில் பழமையும் புதுமையும் பூத்துக் குலுங்கக் காணலாம். பாவலரவர்கள் சென்னையிலே தங்கியிருந்த போது, தம் நண்பர் பாக்கியம் பண்டாரத்திற்கு வெண்பா வடிவில் கடிதம் வரைகிறார். அதிலிரு வெண்பாக்கள் இவை :

"பாக்கியமே யோருருவாய்ப் பாரிடத்து வந்ததிருப்
பாக்கியமே நின்சமுகம் பல்கோடி—யாக்கியவெம்
வந்தனமெ லாமேற்று வாழுமுன்சே மத்தினையு
வந்தனமெ லாமெழுது வாய்.

ஆகுஞ் சுகமா! அடுத்தவர்கள் சேமமா?
மேகம் வழங்கியதா? மேலுமிந்தப்—போகம்
விளையுமா? இன்னுமழை வேண்டுமா? செல்வம்
வளையுமா? ஊர்செழிக்கு மா?"

இது போன்ற பகுதிகளைப் படிக்கும்போது வெண்பாக்களின் இனிமையுடன், நண்பர்கள் நேருக்கு நேரிருந்து உரையாடுவது போன்றதோர் இயல்பினையும் உணர்கின்றோம். கடிதங்கள் இவ்வாறிருக்க வேண்டுமென்றுதானே நாமும் விரும்புவோம் ?

கவிஞர்கள் தங்கள் வாய் மொழியாக அமைக்கும் கடிதங்கள் மட்டுமன்றி, பிறர் கூற்றுகப் புலவர்கள்

அமைக்கின்ற கடிதங்களையும் இலக்கியங்களிற் காண்கின்றோம். அவற்றுள் ஒன்று இளங்கோவடிகளின் சிலம்புச் செல்வத்தில் இடம் பெற்றுள்ளது. வெண்ணிறமும் நறுமணமும் கொண்ட தாழையின் மடலே ஏடாகவும், செம்பஞ்சுக் குழம்பே மையாகவும், நறுமணங் கமழும் பூவரும்பின் முனையே கோலாகவுங் கொண்டு, பிரிந்து சென்ற காதலன் கோவலனுக்கு மாதவி வரைந்ததாய் அமைந்துள்ள கடிதம் பெருஞ்சுவை பயப்பதாகும்.

இன்றைய கவிஞர் பலர் தம் கருத்துக்களை விளக்கக் கடித முறையினைக் கையாளக் காண்கிறோம். அவைகள் பெருஞ்சுவை பயப்பினும், சீட்டுக்கவிகளின் வரிசையில் இடம் பெற மாட்டா. ஏனெனில், கவிதையுருவில் தங்கள் கருத்துக்களை நேரடியாக ஒருவருக்குக் கூறுவதுதானே சீட்டுக்கவியின் நோக்கம் !

——

# 8. இலக்கியத்தில் நகைச்சுவை

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என் ?"

எனக் கூறிச் சென்ருர், வாழ்க்கை இலக்கியம் வழங்கிய வள்ளுவப் பெருந்தகை. வாயினுல் உணவு வகைகளை மட்டும் சுவைக்கத் தெரிந்த மக்களைப்பற்றி உலகுக்குக் கவலையில்லை. செவியினுல் கேள்விப் பொருள்களைச் சுவைக்கத் தெரிந்தவர்களையே உலகம் விரும்புகிறது. அத்தகைய செவிச் சுவைகளுள் ஒன்று நகைச்சுவை. இன்பமும் துன்பமும் கலந்துள்ள மனித வாழ்விலே துன்பமே பெரும்பகுதியெனக் கூறுவது குற்றமாகாது. அத்துன்பமானது குறுக்கிடும்போது, அதைக் கண்டு மருட்சி கொள்ளாமல், 'எதையும் தாங்க இதயமுண்டு,' என்னும் எண்ணத்துடன் அதைத் துகளாக்குவதில் இன்பங்காணும் மனிதன் உயர்வடைகிருன். "இடுக்கண் வருங்கால் நகுக!" என்று கூறி இத்துறையில் நமக்கு வழி காட்டுகின்ருர் வள்ளுவர்.

---

இத்தகைய நகைச்சுவையைக் குறித்து நல்லாராய்ச்சிகள் நடத்திய உளநூலறிஞர் பலருளர். ஹெர்பர்ட்டு ஸ்பென்ஸர், தாமஸ் ஹாப்ஸ் போன்ருர் அவர்களுள் குறிப்பிடத் தக்கார். உடம்பில் குருதியோட்டம் கூடுவதற்கும், மூளையில் புத்துணர்ச்சி புகுவதற்கும் நகைச்சுவை நற்றுணை புரிகிறது. நாள்தோறும் நமது வாழ்விலே நாம் காணும் பல காட்சிகளும், செவி மடுக்கும்

செய்திகளும், நிகழும் நிகழ்ச்சிகளும் நாமறியாமலே நம்மை நகைக்கச் செய்துவிடுகின்றன. வாழைப் பழத் தோலால் வழுக்கி வீழ்கின்ற 'கனவான்', கீச்சுக்குரலிற் பேசும் பேருருவினர், பேசுவதற்காக மேடையிலேறிவிட்டு நடனமாடுகின்ற சொற்பொழிவாளன், விசாரணை நடத் தும்போது தூங்கி விழுகின்ற நீதிபதி—ஆகியோரின் நிலை கவலைக்கிடமானாலும், நமது சிரிப்புக்கிடமாகின்றது. உளறுவாயனாய் இருக்கும் ஒருவன் பெயர் 'நாவுக்கரசு' என்பதை அறியும்போதும், ஓயாமல் நோய்வாய்ப்பட் டிருக்கும் ஒருவன் பெயர் 'ஆரோக்கியசாமி' என்பதைக் கேள்விப்படும்போதும், அவற்றிலுள்ள பொருந்தாத் தன்மையைக் கண்டு நாம் நகைக்கிறோம். மூக்குக் கண் ணாடி முகத்திலேயிருக்க அதனை ஊரெல்லாம் தேடி அலை கின்ற முதியவர், கரும்பலகை துடைக்கும் துணியால் முகவியர்வையைத் துடைக்கின்ற ஆசிரியர், புத்தகத் திற்குப் பதிலாகப் புனைபொருள் பையைத் தூக்கி வரு கின்ற மாணவி, அலுவலகத்திற்கு விரையுந் தருணம் மெய்ப்பையை மாற்றி அணிகின்ற பணியாள், வாழைப் பழத்தை உரித்துத் தோலை வாயிலிடுகின்ற விருந்தினர், ஆறு நேர மருந்தை ஒரே நேரத்தில் குடிக்கின்ற நோயாளி ஆகியோரின் மறதியைக் காண்போர் வயிறு குலுங்கச் சிரிப்பதைப் பார்க்கிறோம்.

இத்தகைய நகைச்சுவைகள் நீண்ட நேரம் தங்கா மல், தோன்றி மறையும் தன்மை வாய்ந்தவை. ஆனால், இவை இலக்கியத்தில் இடம் பெறும்போது நமக்கு மாறாத மகிழ்ச்சியை என்றென்றும் அள்ளிச் சொரிகின் றன. நகைச்சுவையின் சிறப்பையும் பயனையும் நன் குணர்ந்த தமிழர்கள், மிகு பழங்காலந்தொட்டே தங்கள்

வாழ்விலும் இலக்கியத்திலும் இச்சுவைக்கு நல்லதோ ரிடம் நல்கி வந்துள்ளார்கள். கூத்துக்களில் வருகின்ற கோமாளிகளும், அரசர்களின் அவைக்களங்களில் இடம் பெற்றிருந்த 'விதூடகர்களும்' நகைச்சுவையை வளர்ப் பதற்காகவே அமர்த்தப்பட்டவர்களாவார்கள்.

நாட்டு மக்களின் உணர்வுகளைப் படம் பிடித்துக் காட்டுகின்ற நாட்டுப் பாடல்களில் இந்நகைச்சுவை விஞ்சி நிற்கக் காண்கிறோம். அதற்கோர் எடுத்துக் காட்டு :

*"முள்ளு முனையினிலே மூணுகுளம் வெட்டியதில்*
*ரெண்டுகுளம் பாழு;ஒண்ணு தண்ணியே யில்லே!*
*தண்ணியில்லாக் குளத்துக்கு மண்ணுவெட்ட மூணுபேரு;*
*ரெண்டுபேரு நொண்டி; ஒத்தன் கையேயில்லே!*
*கையில்லாத குசவன்செய்த பானையொரு மூணுபானை;*
*ரெண்டுபானை பச்சை;ஒண்ணு வேகவே இல்லே!*
*வேகாத பானைக்குப் போட்டரிசி மூணரிசி,*
*ரெண்டரிசி நறுக்கு;ஒண்ணு வேகவே இல்லே!*
*வேகாத சோத்துக்கு விருந்துண்ண மூணுபேரு;*
*ரெண்டுபேரு பட்னி;ஒத்தன் உண்ணவே இல்லே!*
*உண்ணாத கொத்தனவன் கட்டினது மூணுகோயில்;*
*ரெண்டுகோயில் பாழு;ஒண்ணில் சாமியே இல்லே."*

இன்னொரு பாட்டு ஓயாது வேலை செய்கின்ற ஒரு பாட்டியையும், வீண் பொழுது போக்கும் சிறுமியையும் காட்டுகிறது.

" ஆட்டி ஆட்டி மிளகரைக்கப் பாட்டி வந்தாளாம்,
ஆட்டினதை எடுத்துப்போடக் குட்டி வந்தாளாம்!
நீட்டி நீட்டி வேலைசெய்யப் பாட்டி வந்தாளாம்,
நின்னு நின்னு சிரிச்சிப்பேசக் குட்டி வந்தாளாம்!
கேணித்தண்ணி இறச்சுஏந்தப் பாட்டி வந்தாளாம்,
கிழக்குமேக்குப் பாத்துநிக்கக் குட்டி வந்தாளாம்!
சாணிதட்டி கழனிவைக்கப் பாட்டி வந்தாளாம்,
தயிர்ப்பாலை கொட்டித்திங்கக் குட்டி வந்தாளாம்!
சுள்ளிபொறுக்கக் காடுசுத்தப் பாட்டி வந்தாளாம்,
சூடுதண்ணி போட்டுக்குளிக்கக் குட்டி வந்தாளாம்!
வெள்ளை ஆப்பம் சுட்டுவிக்கப் பாட்டி வந்தாளாம்,
வித்தகாசில் பூவுவாங்கக் குட்டி வந்தாளாம்!"

பிறரைக் கேலி செய்வதற்காக எழுந்த நாட்டுப் பாடல்களில் நகைச் சுவையே அடிப்படையாக அமைந்திருக்கக் காண்கிறோம். ஒரு வளையற்காரனைக் கேலி செய்கின்ற ஒரு பாடல்:

" நண்டுவளை மண்ணெடுத்து
நாகரிக வளையல்செய்து
பொண்டுகளைக் கைபிடிக்கப்
பொறந்தாரய்யா வளையக்காரர் "

காதல் கனிய உரையாடும் தருணங்களிலும் இந்நகைச் சுவைக்கு நல்லிடம் அளிக்கப்படுகிறது. பாமர மக்களின் நகைச்சுவையுணர்வு அவர்கள் வாழையடி வாழையாக வழங்கி வருகின்ற பழமொழிகளிலும், உவமைகளிலும் நன்கு வெளிப்படுகிறது.

'சைனன்கை சீலைப்பேனைப்போல'
'திகம்பர சாமிக்கு வண்ணான் உறவு ஏன்?'
'வழுக்கைத் தலையனிடம் சீப்புக் கேட்பதுபோல'

என்பன அவற்றுள் சில.

நாட்டுப் பாடல்களிலும் பழமொழிகளிலும் நகைச் சுவையைக் காண்பது எளிதாகவிருப்பினும், அறிவுரை யாற்றுகின்ற அறநூல்களிலே அதற்கு இடமளிப்பது கடிதுதான். ஆனால், திருக்குறளில் பல இடங்களில் வான் புகழ் கொண்ட வள்ளுவனார் இச்சுவையைப் பொருத்த மாக அமைத்துக் காட்டுகிறார். கயவர்களாகிய கீழ் மக்க ளின் இயல்பைக் கூற வந்த பொய்யில் புலவர்,

"தேவ ரனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்."

எனக் கூறுகிறார். முதன்முதலாகக் கயவர்கள் தேவர்களை யொத்தவர்களென்று சொல்லி, அவர்களை ஒரு மலையுச்சி யிலே கொண்டு நிறுத்துகிறார்; பின்னர், அதற்குரிய காரணத்தைக் காட்டுகிறார். தேவர்கள் தாங்கள் எண் ணிய செயலை நிறைவேற்றத் தவற மாட்டார்கள். கீழ் மக்களும் அது போலவே தாம் செய்யவிருக்கும் கருமத் தின் நன்மை தீமைகளை ஆராய்ந்து பாராமல், கீழான செயல் புரிந்து தாழ்வடைவர். இவ்வாறு மலை முகட்டி லேற்றிய கயவர்கள் குப்புறத் தள்ளப்படுகிறார்கள். உலகம் சிரிக்கிறது!

சங்கச் செய்யுட்களிலே நகைச்சுவை வெளிப்படும் இடங்கள் பற்பல. கற்றோரேத்தும் கலித்தொகையில் கபி லர் காட்டுகின்ற ஒரு காட்சியை மட்டும் நாம் காண்போம்:

தலைவி, தன் தோழிக்குக் கூறுகிறாள்: "சுடர்த் தொடியே, கேட்பாயாக: முன்னாள் நாம் மணல் வீடு கட்டி மகிழ்ந்தாடிய காலத்து, அதனைக் காலால் சிதைத்து நம்மைத் துன்புறுத்தினானே ஒருவன், அவன் ஒரு நாள்

நம் வீட்டிற்கு வந்தான்; தெரு வாயிலிலே நின்று கொண்டு தாகத்திற்குத் தண்ணீர் கேட்டான். அவனுக்கு நீரூட்டுவதற்காக அன்னேயும் என்னே அனுப்பினுள். நான் நீரூட்டச் சென்றதும் அவன் என் முன்கையைப் பற்றிஇழுத்தான். உடனே நான் 'அம்மா!' என்றலறிவிட் டேன். அன்னே ஓடி வந்தாள். ஆனல், நான், 'இவன் நீருண்ணும் போது விக்கினன்,' எனக் கூறினேன். அன்னே அவன் விக்காமலிருக்க அவன் நெஞ்சைத் தடவிக்கொடுத்தாள். அவனே, கடைக்கண்ணுல் என் னேக் கொல்வான் போல நோக்கி, நகைக் கூட்டம் செய் தான்!'' என்று கூறி முடிக்கிருள் தலைவி.

செந்தமிழ்க் காப்பியங்களாகிய சிந்தாமணி, சிலப் பதிகாரம் போன்ற நூல்களிலும் நகைச்சுவை பொருத்த மான இடங்களிலே புகுத்திக் காட்டப்படுகிறது. மணி மேகலையும் சுதமதியும் மலர் கொய்வதற்காக மலர் வனம் புகும்போது, வீதியிலே பல காட்சிகளைக் கண்டு செல் கின்றனர். அவற்றுள் ஒன்று, உண்ணு நோன்பியொருவ னுக்கும் களிமகனொருவனுக்குமிடையே நடைபெறுகின்ற உரையாடல். அருகப்பள்ளியில் வாழ்கின்ற உண்ணு நோன்பி, காணுத உயிர்களுக்கும் கையற்றேங்கி, மண்ணு மேனியனுய், நாணமும் உடையும் நீத்து நடந்து வருகி ருன். அவனைக் கள்ளுண்பதற்காக இரந்து வேண்டு கின்ற களிமகன் கூற்று நம்மைச் சிரிக்க வைக்கிறது:

" வந்தீ ரடிகள்! நும் மலரடி தொழுதேன்!
எந்த மடிகள்! எம்முரை கேண்மோ:
அழுக்குடை யாக்கையிற் புகுந்த நும்முயிர்
புழுக்கறைப் பட்டோர் போன்றுளம் வருந்தாது

இம்மையும் மறுமையும் இறுதியில் இன்பமும்
தன்வயிற் றருஉம்;என் தலைமக னுரைத்தது,
கொலையு முண்டோ கொழுமடற் றெங்கின்
விளை பூந் தேறலின் மெய்த்தவத் தீரே!"

எனக் களிமகன் களி ததும்பக் கூறுகிறான்.

கற்பின் கொழுந்தாகிய கண்ணகியும் அவள் காவலன் கோவலனும், மாதவத்தாட்டியார் கவுந்தியடிகளுடன் மதுரை நோக்கிச் செல்லும் காட்சியைக் காட்டுகிறார், பாவடிகள் தேன் வடியப் பாடிய இளங்கோவடிகள். நான்மறையாளனொருவன் வழியிலே எதிர்ப்படுகிறான்; திருமால் குன்றத்தில் பெருமால் கெடுக்கும் பிலங்களாகிய சரவணம், பவகாரணி, இட்ட சித்தி ஆகியவற்றின் அற்புதங்களைக் கூறுகின்றான். அவனது பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த கவுந்தியடிகள், இறுதியாக,

"நலம்புரி கொள்கை நான்மறை யாள!
பிலம்புக வேண்டும் பெற்றியீங் கில்லை;
வாய்மையின் வழாது மன்னுயி ரோம்புநர்க்கு
யாவது முண்டோ எய்தா அரும்பொருள்?
காமுறு தெய்வம் கண்டடி பணிய
நீபோ; யாங்களும் நீணெறிப் படர்குதும்."

என்று கூறும்போது இளங்கோவடிகளின் நகைச்சுவையுள்ளத்தை நயந்து போற்றுகின்றோம்.

சீவக சிந்தாமணியில் கேமசரியாரை மணந்த சீவகன் விரைவிலே பிரிந்து செல்கிறான்; வழியிலே வழிப்போக்கனொருவனைக் காண்கிறான். இருவருக்குமிடையே நடைபெறுகின்ற உரையாடல் நகைச்சுவையுடன் நல்ல கருத்

துக்களையும் விளக்குகின்றது. நான்கு மனைவிகளின் வயிற்றில் ஒரு புதல்வன் பிறந்தானெனக் கேட்டதும் நாம் வியப்படைகிறோம். தானம், சீலம், தவம், அறிஞர் சிறப்பு ஆகியவை அம்மனைவியர் என்பதும், நல்வினையே அப்புதல்வன் என்பதும் அறியும்போது நாம் சிரிக்கிறோம். இது திருத்தக்க தேவர் வெளிப்படுத்துகின்ற நகைச் சுவை.

இது போலக் களிதமிழ்க் கம்பர் ஓர் உரையாடலை அமைத்துள்ளார். மிதிலைச் செல்வியைத் தேடித் தனது முன்னிலையில் வந்த இராமதூதனை நோக்கி இராவணன், "வாலி நலமா?" என வினவுகின்றான். வானர வீரன் வாலியின் வாலினால் பிணைக்கப்பட்டு அரக்கர்கோன் அடைந்த அவமானத்தை அனுமன் நன்கறிவான். ஆகவே, அவன், "அஞ்சவேண்டா! அரக்கர் தலைவ, வாலியும் இறந்தான்; அவனது வாலும் அழிந்துவிட்டது! ஆனால், சூரியகுலத் தோன்றலாகிய வாலியின் அழிவுக்குக் காரணமானது இராமனின் ஒரு கணையே என்பதை மட்டும் மறந்துவிடாதே!" என மறுமொழி கூறுகின்றான்.

*"அஞ்சலை! அரக்க பார்விட் டந்தர மடைந்தா னன்றே*
*வெஞ்சின வாலி; மீளான்; வாலும்போய் வீந்த தன்றே!"*

என்று கம்பர் காட்டுகின்ற தொடர் சுவை பயப்பதாகும்.

பிற்காலத்தெழுந்த பிரபந்தங்களிலும் நகைச்சுவையை மிகுதியாகக் காண்கின்றோம். பிரபந்த வகைகளுளொன்று பரணி; ஆயிரம் யானை அமரிடை வென்ற மானவனுக்கு வகுக்கப்படுவது. அப்பரணிகளுட்சிறந்ததொன்று கலிங்

கத்துப் பரணி. அதில் சயங்கொண்டார் பேய்களின் உருவத்தையும், அவை பல் துலக்கிக் குளிக்கின்ற காட்சியையும் காட்டுகின்றார். பாம்புகளைப்போன்ற மயிர்களும், பாசி படிந்த மூக்குகளும், ஆந்தைகளுலவும் செவிகளும், மண்வெட்டிப் பற்களும், விண் முட்டும் தலைகளும் பேய்களுக்கு அணி செய்கின்றன. அப்பேய்கள் கூழருந்துவதற்காக ஆயத்தமாகின்றன. யானைக் கொம்பால் பல் விளக்கி, விலா எலும்பால் நாக்கு வழித்து, அம்புகளால் நகம் வெட்டி,மூளையைந் தேய்த்து, இரத்த மடுவில் நீராடி, கொழுப்பாடை அணிந்து வருவது, பார்ப்பதற்கு அருவருப்பாக இருந்த போதிலும், நகைச்சுவை மிகுந்ததாகும்.

கி. பி. பதினன்காம் நூற்றுண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த கவி காளமேகத்தை அனைவருமறிவர். 'நாங்கள் கவிராசர்கள்' எனச் செருக்குடன் கூறிய புலவர்களை நோக்கி, 'கவி' என்பதற்கு 'மந்தி' என்னும் சிலேடைப் பொருளை அமைத்து,

*" வாலெங்கே? நீண்டெழுந்த வல்லுகிரெங் கே? நாலு*
*காலெங்கே? ஊன்வடிந்த கண்ணெங்கே?—சாலப்*
*புவிராயர் போற்றும் புலவர்காள்! நீங்கள்*
*கவிராயர் என்றிருந்தக் கால்."*

என்று கேட்டு அவர்களின் துடுக்கடக்கினுர் அவர். காளமேகத்தின் பாட்டுக்கள் பல, நகைச் சுவைக்கு நல்ல எடுத்துக்காட்டுக்களாய் விளங்குகின்றன. முருகன், குறமகளாகிய வள்ளியை மணஞ்செய்துகொண்டதாலேற்பட்ட தொல்லைகளைக் கூறுகிறார் காளமேகம். சிவபெருமான் நஞ்சுண்டான்; உமையம்மை தவஞ்செய்தாள்; திருமால்

மண் தின்றான்; பிரமன் நான்முகனானான்; வானவர் கண்ணிமைக்காமல் விழித்திருக்கின்றனர். இது அவர் கற்பனை. காஞ்சீபுரத்து வரதராசப் பெருமானின் கருடோற்சவத்தைக் கண்டார் காளமேகம். கற்பனையுதித்தது:

“பெருமாளும் நல்ல பெருமாள்; அவர்நம்
திருநாளும் நல்ல திருநாள்—பெருமாள்
இருந்த இடத்தில் இராமையினால் ஐயோ
பருந்தெடுத்துப் போகிறதைப் பார்!”

காளமேகம் பாடிய விகடராமன் குதிரை மிக்க பிரசித்தி பெற்றது. முன்னிருந்து மூன்று பேர் கடிவாளத்தைப் பிடித்திழுக்க, பின்னிருந்து இரண்டு பேர் தள்ள, மாதமொன்றுக்குக் காதவழி செல்வது அக்குதிரைக்கே தனிப் பெருமை. காளமேகத்திற்கு முன்னர் வாழ்ந்த கம்பர், ‘நாராயணன்’ என்னும் சொல்லை, ‘நராயணன்’ எனக் குறுக்கிவிட்டார். இவ்வாறு நெட்டெழுத்தைக் குற்றெழுத்தாக மாற்றியதைக் குத்திக் காட்டுகின்றார் காளமேகம்: “கம்பன் நாராயணனை நராயணனென்றதால், நானும் ‘வார்’ என்பதை ‘வர்’ என்றும், ‘வாள்’ என்பதை ‘வள்’ என்றும், ‘நார்’ என்பதை ‘நர்’ என்றும் சொல்வேன்,” எனப் பாடுகின்றார்.

தமிழ் இலக்கியம் மறுமலர்ச்சி அடைந்துள்ள இன்று, நகைச்சுவை மிகவும் போற்றி வளர்க்கப்படுகிறது. பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் நாடகமாகிய ‘மனோன்மணீய’த்தின் உரையாடல்கள் இத்துறையில் நயஞ்செறிந்து விளங்குகின்றன. திக்கு வாயனொருவன் நள்ளிரவு நேரத்தில் ஏதோ பேசுவதற்குத் தொடங்கி, “கொக்கொக்கொக்”

என்கிருன். உடனே பக்கத்தில் நிற்பவன், "கூவலை விடியுமுன்," என்று கூறுந்திறன் மூன்று சொற்களில் அமைந்துள்ள ஆழ்ந்த நகைச்சுவையை அழகாகக் காட்டுகிறது.

இக்காலக் கவிஞர்கள், தாங்கள் கையாளுகின்ற கற்பனைகளிலும் உவமைகளிலும் நகைச்சுவையை அழகுற அமைத்துக் காட்டுகின்றுர்கள். கவிஞர் பாரதிதாசன் ஒரு மயிலைப் பார்க்கிருர். அழகுப் பொருள்களைக் காணும் போது கவிஞர்கள் ஆரணங்குகளை நினைப்பது இயல்பு தானே! ஆனுல், மாதர்களின் கழுத்துப்போல மயில்களின் கழுத்துக் குட்டையானதன்று. அதற்குக் காரணமும் இல்லாமலில்லை. பெண்களுக்குக் கழுத்து நீண்டிருந்தால், அண்டை வீட்டு அறையிலே நடப்பதை ஆர்வத்தோடு பார்ப்பார்களாம்! மயில் அப்படிப் பார்க்காதாம்!

*"அயலான் வீட்டில் அறையில் நடப்பதை*
*எட்டிப் பார்க்கா திருப்ப தற்கே*
*இயற்கை யன்னை இப்பெண் கட்கெலாம்*
*குட்டைக் கழுத்தைக் கொடுத்தாள் ; உனக்கோ*
*கறையொன் றில்லாக் கலாப மயிலே!*
*நிமிர்ந்து நிற்க நீள்கழுத் தளித்தாள்."*

இன்னேரிடத்திலே கவிஞர் ஒரு குரங்கைப் பார்க்கிருர். ஆலமரத்திலிருந்து தொங்கிய ஒரு பாம்பை விழு தென நினைத்துப் பற்றியது மந்தி ; பாம்பென உணர்ந்ததும் விளக்கைத் தொட்ட குழந்தையைப் போல வெடுக்கெனக் குதித்தது. மருண்டவன் கண் ணுக்கு இருண்டதெல்லாம் பேயாகத் தோன்றுவது போலப் பின்னர் விழுதுகளும் வேர்களுமெல்லாம் அக்

குரங்குக்குப் பாம்பாகப் படுகின்றன. அதனால், தலை கால் தெரியாமல் தாவிச் சென்ற மந்தி, மர உச்சியிலே சென்று மன அமைதி பெற எண்ணியது. ஆனால், திரும்பிப் பார்த்தது ; தனது வாலைக் கண்டது. அதுவும் பாம்போ என நினைத்துத் திடுக்கிட்டது !

நாஞ்சில் நாட்டுக் கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளை யவர்களின் ' மருமக்கள் வழி மான்மியம் ', தமிழ் இலக்கியத்தில் அண்மையில் எழுந்த ஒரு நகைச்சுவைக் களஞ்சியம். பஞ்சகல்யாணிப் பிள்ளை ஐந்து மனைவியர்களை மணந்து வாழ்கிறார். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு தொழில் உண்டு.

" தொழுத்துச் சாணம் வழிக்க ஒருத்தி,
தொட்டித் தண்ணீர் சுமக்க ஒருத்தி,
அடுக்களைச் சமையல் ஆக்க ஒருத்தி,
அண்டையில் அகலா திருக்க ஒருத்தி "

இத்தனைபேர்க்கும் அடிமையாய் இன்னொருத்தி ! ஐவருள் ஒருத்தியை அண்மையிலே அமர்த்தியிருப்பதற்குத் தகுந்த காரணமும் கூறுகிறார். அவள் பொன்னொளிர் மேனியளாய் இருப்பது பஞ்சகல்யாணிப் பிள்ளைக்கு ஓர் அச்சம் ! தட்டான் தங்கமென்று நினைத்து அவளைத் தராசில் வைத்து எடைபோட்டுவிடுவானோ என்பதுதான் அச்சத்திற்குக் காரணம் ! ஆகவே, பஞ்சகல்யாணிப் பிள்ளை,

" தங்கப் பெண்ணே தாராவே!
தட்டான் கண்டால் பொன்னென்பான்;
தராசில் வைத்து நிறுஎன்பான் ;
எங்கும் போகாமல் இங்கு இரு."

என்று கட்டளேயிடுகிருர். இக்கதையினுள் மருமகனுக வருகின்றவன், பள்ளியில் பயில்கின்ற முறை, நகைப் பூட்டுகின்றது. படிக்கச் சென்றவன் எல்லாம் பணயம் வைக்கிருன். எதற்காக ?

" ஆமை வடைக்காய் அரைஞாண் பணயம்,
போளிக் காகப் புத்தகம் பணயம்,
சீடைக் காகச் சிலேட்டுப் பணயம்,
முறுக்குக் காக மோதிரம் பணயம்,
காப்பிக் காகக் கடுக்கன் பணயம்,
கூத்துக் காகக் குடையும் பணயம்."

இப்படிப் படித்து எங்கே முன்னேற்றமடையப் போகிருன் !

இவ்வாருகப் பழங்காலத்திலிருந்து இன்றைய மறுமலர்ச்சிக் காலம் வரையிலே, தமிழ் மக்கள் தங்கள் வாழ்விலும் இலக்கியத்திலும் இச்சுவையைப் புகுத்தி வறண்ட வாழ்க்கையில் வனப்பைக் கண்டார்கள். அதைக் கண்டறிந்து நாமும் சிரித்து வாழ்வோம் ; சிந்தை மகிழ்வோம் ! சிரிக்கத் தெரிந்தோர் வாழத் தெரிந்தோர்.

———

# 9. வெளி நாட்டு இலக்கியங்களில் இந்தியப் பண்பாடு

மனிதகுல வரலாறு மாண்பேறும் பல நாகரிகங்களால் வனப்பும் சிறப்பும் பெற்றுத் திகழ்கிறது. பாபிலோனிய, மெசப்பொட்டோமிய, சுமேரிய, எகிப்திய, கிரேக்க, உரோம நாகரிகங்களெனப் பலவற்றை உலக வரலாறு ஒன்றன் பின் ஒன்ருக வரிசைப்படுத்திக் காட்டுகின்றது. வாழ்ந்து வீழ்ந்த இந்நாடுகளின் வரிசையிலே, பாரத நாடு பெற்றுள்ள பழம்பெருமையும், இன்று விடுதலை பெற்று வீறுடன் எழுகின்ற காட்சியும், உலக மக்களின் கருத்தைக் கவர்வனவாய் அமைந்துள்ளன.

வடதிசைக்கண் வான்ரேய் இமயம் ; தென்திசைக்கண் கன்னிக்குமரி ; இருபுறமும் கவரி வீசும் கடல்கள் ; வற்ருத பேராறுகள் ; வளங்கொழிக்கும் மாமலைகள் ; இனிய பொழில்கள் ; நெடிய வயல்கள் ; குறை போக்கும் கனி கிழங்குகள் ; நிறைவளிக்கும் கன்னலும் செந்நெல்லும் ; இத்தகைய வளங்களால் உறுபசியும் ஓவாப் பிணியும் சேராது சிறந்தோங்கிய பாரதப் பெருநாடு, பெருமைக்குரிய பண்பாடொன்றைக் கண்ணெனக் காத்து, கனிவுடன் வளர்த்துள்ளது. வன்மையான நிலத்தை, நீர் பாய்ச்சி மென்மையாக்கிப் பண்படுத்தி விதை விதைத்தால் வளப்பமான பயிர்கள் தோன்றுவதைப்போல, மக்களினத்தாரிடையேயும் பண்பாடு தோன்றுகிறது. விலங்கியல்பை வீசியெறிகின்ற மனிதகுலம், நல்லொழுக்க நீர் பாய்ச்சி மன நிலத்தைப் பண்படுத்தும்போது, நாகரிகம் முகிழ்க்கின்றது. பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்து

பாரத நாட்டிலே தோன்றி வளர்ந்த பெருமக்களால் பண்படுத்தப்பட்டுப் பின்னவர்களின் உதிரங்களிலே ஊறிச் சுரந்து ஊற்றெடுத்து நிற்பதைத்தான், பாரதப் பண்பாடெனப் பகர்கின்றோம். உள் நாட்டிலே இப்பண்பாடு விளைத்த வியத்தகு நிகழ்ச்சிகள் பல. மதத்தாலும், இனத்தாலும், நிறத்தாலும், மொழியாலும் வேற்றுமை மிகுந்த மக்களையெல்லாம் இப்பண்பாடு பிணைத்தெடுத்தது. நாட்டின் வளத்தால் கவரப்பட்டு நா நீரூற இந்நாட்டை அடிமை கொள்வதற்காக அடியெடுத்து வைத்த ஆரியர்களையும், சாகர்களையும், ஊணர்களையும், மங்கோலியர்களையும் அன்புறத் தழுவியணைத்து, இந்நாட்டின் இனிய புதல்வர்களாகப் புகலூட்டிய பெருமை இப்பண்பாடு விளைத்த பயனே தான்.

இவ்வாறு வளர்ந்த இப்பண்பாடு, உள் நாட்டில் மட்டுமன்றி இந்நாட்டுடன் தொடர்பு கொண்ட வெளி நாடுகளிலெல்லாம், அரிய நினைவுச் சின்னங்களை அமைத்துள்ளது. பண்டை நாள் தொட்டே வணிகத்திற்காகப் பாரதநாட்டை அணுகி வந்தவர் பற்பலர். மிகு பழங் காலத்தில் கிரேக்கர்களும் உரோமர்களும் எகிப்தியர்களும் அராபியர்களும் சீனர்களும் வணிகர்களாய் வந்து சென்றார்கள். பிற்காலத்தில் போர்த்துகீசியர், ஒல்லாந்தியர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகியோர் வணிகர்களாய் வந்து ஆட்சியைக் கைப்பற்றினர். இந்தியர்கள்—குறிப்பாகத் தமிழர்கள்—பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே, மேற்றிசையில் எகிப்து, பாபிலோன், சால்டியா முதலிய நாடுகளுக்கும் ; கீழ்த்திசையில் பர்மா, மலாயா, சாவகம், சுமத்திரா, சீயம் போன்ற நாடுகளுக்கும் வணிகர்களாய்ச் சென்று வந்தார்கள்.

மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், சாலமன் தீர்க்க தரிசியின் காலத்தில், இந்தியத் துறைமுகங்களிலிருந்து தந்தமும், தங்கமும், மந்திகளும், மயிற்றோகைகளும் மெசப்பொட்டோமியாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்ட செய்தியை விவிலியத்தின் பழைய ஏற்பாட்டிற் காண்கின்றோம். மேலைக்கடற்கரையிலிருந்து சென்ற தேக்கும் மிளகும், கீழைக்கடற்கரையின் முத்தும் பவழமும், 2600 ஆண்டுகளுக்கு முன்னர், பாபிலோன் நகரத்தில் ஆர்வத்துடன் எதிர்பார்க்கப்பட்டன. மலையாள நாட்டுத் தேக்கு மரங்கள் எகிப்தின் பட்டைக் கோபுரங்களுக்குப் (Pyramids) பயன்பட்டன. அகஸ்தஸ் உரோமப் பேரரசை ஆண்ட காலத்தில், உரோமாபுரிச் செல்வியர், உறையூர்ச் சேணியர்களின் கைத்திறஞ்செறிந்த பாம்புரி போன்ற மெல்லாடைகளையும், தமிழ்க் கம்மியர்களின் வினைத்திறம் நிறைந்த அணிகளையும், பாண்டி நாட்டு முத்துக்களையும் பெறுவதற்காக அளவில்லாத பொன்னை வாரி வழங்கினர். ஆரணங்குகளின் ஆர்வத்தைக் கண்டு அஞ்சிய அரசியலார், நாட்டுப் பொருள் நிலையைக் காத்தற்குச் சட்டமியற்றினர். மலையாள நாட்டு விரைப் பொருள்களும், மிளகும், நீலமும், சோழநாட்டுக் கண்ணாடிப் பொருள்களும் சீன நாட்டுக்குச் சென்றன. உள்நாட்டிலிருந்தும் வெளி நாடுகளிலிருந்தும் வந்து காவிரிப்பூம்பட்டினத்தின் கடைத்தெருக்களிலே குவிந்து கிடந்த பொருள்களைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பட்டினப்பாலையில் படம் பிடித்துக் காட்டுகின்றார் :

*" நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்*
*காலின் வந்த கருங்கறி மூடையும்*

வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகு''

என்பது அப்புலவர் வாக்கு.

இவ்வாறு இந்திய நாட்டிலிருந்து வெளிச்சென்றவர்களும், வெளி நாடுகளிலிருந்து இங்கு வந்தவர்களும், பாரதப் பண்பாட்டின் தூதர்களாய் விளங்கியவர்களெனக் கூறுதல் பொருந்தும். இத்தகைய கூட்டுறவால் அனைத்துலகும் பாரதப் பண்பாட்டைக் குறித்து ஓரளவு அறிந்திருந்தது. ஸுலைமான், அபூசையிது, இப்னு குர்த்தபா, அல்மசூதி, அல்பெரூனி, ரஷீதுத்தீன், அப்துல்வாஸப்புப் போன்ற அராபிய வணிகர்களின் நூல்களும் தங்—குவோ—சி—பு, பிங்—சௌ—கோ—மன், சுங்சி, செ—கோ—பெய், தாவோ—யி—சிலியோ போன்ற நூல்களும், முறையே அரபு நாட்டிலும் சீன நாட்டிலும் பாரதப் பண்பாட்டின் நறுமணம் பரவுவதற்குக் காரணங்களாய் அமைந்தன. பதின்மூன்றும் நூற்றுண்டில் பாரதநாடு வந்து சென்ற இத்தாலி நாட்டு மார்க்கோ போலோ, முகம்மது துக்லக்கின் ஆட்சியின் போது வந்த இப்னுபதூதா ஆகியோரின் பயண நூல்களும் இந்தியாவைக் குறித்து வெளி நாட்டார் அறிவதற்குப் பெரிதும் துணை புரிந்தன. இவை மட்டுமன்றி, பிற்காலத்தில், தென்னுப்பிரிக்கா, கிழக்காப்பிரிக்கா, மாரி

சியஸ், இலங்கை, பர்மா, மலாயா, இந்தோனேஷியா, இந்தோ சீன, சீயம், பிஜி ஆகிய இடங்களில் இந்தியர்கள் குடியேறத் தொடங்கியதும் அதற்கு நல்லதொரு வாய்ப்பாயிற்று.

சீயம் நாட்டிலே பாரத மக்கள் மிகு பழங்காலத்திலேயே குடியேறினர்கள். சம்ஸ்கிருதம் அங்கு ஒரு காலத்தில் அவைக்கள மொழியாய் இருந்ததெனக் கூறப்படுகிறது. ஹூனன் என்ற பெயரால் வழங்கப்பட்டு வந்த இந்தோ சீன, கி. பி. நான்காம் நூற்றுண்டில் இந்தியா வழியாகப் புத்துணர்ச்சி பெற்றது. ஒரு போது அங்கு அரசு செலுத்திய மன்னனெருவன், அரசு துறந்து இந்தியா வந்தடைந்தான். எட்டாம் நூற்றுண்டில் அந்நாட்டை ஆண்ட பாண்டுரங்கப் பரம்பரையினர் இந்திய ஆட்சி முறையையே மேற்கொண்டிருந்தனர். மலாயா நாட்டிலோ, தமிழர்கள் பழங்காலத்திலிருந்தே குடியேறத் தொடங்கினர்கள். மலாயா என்ற சொல்லே மலயம் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாய் இருக்க வேண்டுமென அறிஞர் கருதுவர். அது போன்றே இலங்கையைக் குறிக்கும் 'சிங்களம்' என்ற சொல் 'சீ', 'ஈழம்' என்னும் வடமொழி தமிழ்ச் சொற்களின் திரிபாய் அமைந்திருக்க வழியுண்டு. இந்நாடுகளின் மொழிகளிலும் இலக்கியங்களிலும் இந்தியப் பண்பாட்டின் சின்னங்கள் மிகுதியாகக் காணப்பட்ட போதிலும், இந்தியாவுடன் முற்காலத்தில் வாணிகம் செய்தோர்களுள் தலை சிறந்தோர்களாகிய அராபியர்கள், பிற்காலத்தில் வாணிகம் செய்தோர்களுள் தலை சிறந்தோராகிய ஆங்கி

லேயர், ஆகியோரின் மொழியிலும் எண்ணங்களிலும் இலக்கியங்களிலும் பாரதப் பண்பாடு எவ்வாறு வெளிப் படுகிறதென்பதைச் சுருங்கக் காண்போம் :

மிகு பழங்காலத்தில் மேலைக்கடற்கரையில் அமைந் திருந்த சால், கல்யாண், சுபரா (Chaul, Kalyan, Supara) என்னுமிடங்களில், அராபியக் குடியேற்றங்கள் அமைந்திருந்ததாக, பஜ்லுல்லா லுத்புல்லா பரீதி என் பார் பகர்கின்றார். மலையாளக் கரையில் அராபியர் களின் குடியேற்றங்களிருந்ததைப் பிளினி (Pliny) என் பாரும் குறிப்பிட்டுள்ளார். இந்தியா என்னும் பெயரே அராபியர்களின் மனங்களுக்கு ஒரு வகை மகிழ்ச்சியை ஊட்டியது. ஆழ்ந்த அறிவுடைமையையும் உயர்ந்த பண் பாட்டையும் குறிக்கும் ஒரு சொல்லாக அவர்கள் காதில் அது இன்பத்தேன் பாய்ச்சியது. ஆகவேதான் அந் நாட்டு ஆரணங்குகளுக்கு 'ஹிந்தா' என்னும் பெயர் சூட்டினர். 'ஹிந்த் பிந்த் அல்ஹாரிதில் கிந்தி' என்பது போன்று எத்தனையோ பெயர்களை அரபு நாட்டு வர லாற்றிலே பார்க்கின்றோம். மாதர்கள் மட்டும் அப்பெய ரைச் சூட்டிக்கொள்வதைப் பொறாத ஆடவர்கள், அப் பெயருக்காகப் போட்டியிட்டார்கள். பெருமானார் முகம் மது நபியவர்களின் தோழரொருவர், ஹிந்த் அபீ ஹாரித் அத்தமீமி என்னும் பெயரைத் தாங்கியிருந்தார்.

அது மட்டுமன்றி, 'ஹிந்த்' என்ற சொல் கூர்மை யைக் குறிப்பதாகக் கொண்டு, கூர்மையான வாளை 'அல்ஹிந்தி' என வழங்கினர் ; விரைப்பொருளாகப் பயன்படுத்தும் ஒரு செடிக்கு 'ஹிந்த்' எனப் பெயர் சூட்டினர். இந்திய நாட்டில் அராபியர்கள் கண்ட புளி யம்பழம் அவர்களுக்கு வியப்பையூட்டியது. அவர்கள்

நாட்டுப் பேரீச்சம்பழம் போல அது காட்சியளித்ததால், அதை, ‘ தமருல் ஹிந்த் ’ (இந்திய நாட்டுப் பேரீச் சம்பழம்) என வழங்கினர். அதுவே பின்னர் ஆங்கிலத் தில் ‘டாமரிண்டு’ (tamarind) எனத் திரிந்தது.

நபிகள் நாதர் அவர்கள் வருகைக்குப் பின்னுல், இரு நாடுகளுக்குமிடையேயுள்ள கூட்டுறவு மிகவும் வலிவடை யத் தொடங்கியது. கலீபாக்களின் ஆட்சிக் காலத்தில் இலக்கியம், மருத்துவம், கணிதம், வான நூல், தத்துவ ஞானம், ஒழுக்கமுறை முதலிய துறைகளிலெல்லாம் இந்தியச் சின்னங்களைப் பார்க்கிறோம். அராபிய எண்கள் (Arabic Numerals) என்னும் பெயருடன் இன்றைய உலகத்தார் கையாளும் எண்கள், முதன்முதலில் இந்தி யாவிலிருந்து அரபு நாட்டிற்குச் சென்றன. அப்பாஸிய கலீபாவாகிய அல்மன்சூர் அவர்களின் அவைக்களத்திற் குச் சிந்திலிருந்து சென்ற அல்ஹிந்தி என்பார் எழுதிய வானநூல் ஆராய்ச்சி அரபியில் மொழி பெயர்க்கப்பட்டுப் பெரிதும் பயன்படுத்தப்பட்டது. பாரசீக மொழியில் மொழிபெயர்க்கப்பட்டிருந்த பஞ்சதந்திரக் கதைகளை, அப் துல் லாபின் முகப்பா என்பார் அரபியில் ஆக்கினுர். அம் மொழி பெயர்ப்பு இன்று உலகப்புகழ் பெற்றுள்ளது. அப்பா ஸியர்களின் புகழ்பெற்ற கவிஞராகிய அல்லஹிசி என்பார், பஞ்சதந்திரக் கதைகளைப் பதினுன்காயிரம் பாக் களிலமைத்துப் பாடினுர்; அத்துடன் இஸ்லாமியக் கொள் கைகள் பலவற்றை விளக்கிச் செய்யுளமைத்திருக்கிறுர். அவர்தம் செய்யுட்களை ஆராய்ந்தோர், அவர் இந்திய யாப்பு முறைகளை அடியொற்றியே அவ்வாறு செய்திருக்க வேண்டுமெனக் கருதுகின்றனர். ‘கலீபா ஹாரூன் அல்ர ஷீத்’ அவர்களுக்கு இந்திய மருத்துவ முறையில் உறுதி

யான நம்பிக்கையிருந்ததால், அவர் இந்தியாவிலிருந்து பல மருத்துவர்களையும் தத்துவ ஞானிகளையும் தமது அவைக்களத்திற்கு அழைத்தார். அவர்களுள் அரசரின் பேரன்பிற்குரிய பெருமருத்துவர் ஒருவர் இருந்தார். அரபி மொழியில் மொழி பெயர்க்கப்பட்ட நூல்களையும் அவற்றின் ஆசிரியர்களையும் குறித்து இப்னுநாதிம் என்பார் விளக்கமாக வரைந்துள்ளார். இந்திய நாட்டு இலக்கியச் செல்வங்களையும் மக்களின் வாழ்க்கை முறைகளையும் அரபியர்களுக்குப் படம் பிடித்துக் காட்டிய பெருமையில் பெரும்பகுதி அல்பெரூனி என்பாருக்கே உரியது. அவர் இந்தியாவிற்கு வந்து, இந்திய மொழிகளைக் கற்று, இந்தியர்களுடனே வாழ்ந்து, பல நுண்ணிய ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருக்கின்றூர். இத்தகைய கூட்டுறவால் அரபி அகராதியிலேயே பல இந்தியச் சொற்கள் இடம் பெற்றன. சந்தனம், 'ஸந்தல்' (Sandal) எனப்பட்டது. கர்ப்பூரம், 'காபூர்' (Kafur) எனப்பட்டது. கிராம்பு, 'கரன்பூல்' (Karanful) என்றும், தாம்பூலம், 'தன்பல்' (Tanbul) என்றும், இஞ்சி, 'ஜன்ஜபீல்' (Zanjabil) என்றும், தேங்காய் (நாளிகேரம்) 'நார்ஜீல்' (Narjil) என்றும் குறிக்கப்பட்டன. இவை போன்ற பல இந்திய மொழிச் சொற்கள் அரபி அகராதியில் இடம் பெற்று இலக்கியங்களிலும் பயன்படுத்தப்பட்டன. வைகறையைக் குறிக்கும் (ஸுபஹ்) என்ற அரபிச் சொல் கூட இந்தியாவிலிருந்து சென்றிருக்கலாமென எகிப்திய அறிஞர் ஸையிதான் (Zaydan) என்பார் கருதுகின்றூர்.

இது போன்றே, பிற்காலத்தில் இந்தியாவுடன் தொடர்பு கொண்ட ஆங்கிலேயர்களின் மொழியிலும் இலக்கியத்திலும் இந்தியச் சின்னங்களைப் பார்க்கின்றோம்.

பதினாரும் நூற்றுண்டிற்குப் பின்பு ஆங்கிலத்தில் இடம் பெற்ற இந்தியச் சொற்கள் ஒன்றிரண்டல்ல. உணவுக்கு ஆதாரமாக அமைந்த ரைஸ் (Rice) என்ற சொல்லே இங்கிருந்து சென்றதுதான். தமிழ் அரிசி கிரேக்கர்களின் 'ஒருஸா' (Oruza) ஆகி, இத்தாலியர்களின் 'ரிஸோ' (Riso) ஆகி, பிரெஞ்சில் 'ரிஸ்' ஆகி, இறுதியில் ஆங்கில ரைஸ் (Rice) ஆய் உரு மாறியது. பழந்தமிழ் அடைக்காய் 'அரிக்கனட்டு' (Arecanut) ஆயிற்று. வெற்றிலை, 'பீட்டல்' (Betal) ஆயிற்று. பலாப் பழத்தைக் குறிக்கும் மலையாளச் சொல்லாகிய சக்கை, 'ஜாக்' (Jack) ஆயிற்று. பெருச்சாளியைக் குறிக்கும் தெலுங்குச் சொல்லாகிய பந்திக்கொக்க, 'பண்டிக்கூட்டு' (Bandicoot) ஆயிற்று. மூங்கிலைக் குறிக்கும் கன்னடச் சொல்லாகிய பம்பு, 'பேம்பூ' (Bamboo) ஆயிற்று. இன்னும், சுண்ணம் (Chunam), கொப்ரா (Copra), கறி (Curry), மேங்கோ (Mango), பேண்டி (Bandy), பந்தால் (Pandal), கூலி (Cooli), கேஷ் (Cash), டீக்கு (Teak), கட்டமரான் (Catamaran), முளகுடானி (Mulagutauni) என்பன போன்ற நூற்றுக் கணக்கான சொற்களைப் பார்க்கின்றோம்.

இவ்வாறு இந்தியச் சொற்களைக் கையாள்வதோடு மட்டுமன்றி, இந்திய அறிஞர்களின் கருத்துக்களையும் ஆங்கில ஆசிரியர்கள் இலக்கியங்களிலே கையாளக் காண்கிறோம். இரபேபின் இஸ்ரோ (Rabebin-Isro) என்னும் தலைப்பினைத் தாங்கியுள்ள கவிதையில் கவிஞர் பிரௌனிங், இறைவன் படைப்புத் தொழிலைக் குயவனுக்கும்,

மண்பாண்டத்திற்கும் ஒப்பிடுதல் பாரதச் சிந்தனையின் எதிரொலியே என்பதில் தவறொன்றுமில்லை. இறைவனைக் குயவனுக்கும் உயிர்களைப் பாண்டங்களுக்கும் ஒப்பிடும் இயல்பை இந்நாட்டு மொழிகளனைத்திலும் பார்க்கின்றோம். அடுத்தபடியாக, சர் எட்வின் ஆர்னல்டு (Sir Edwin Arnold) என்பார் புத்தர் பெருமானின் வரலாற்றை 'ஆசியச் சுடர்' (Light of Asia) என்னும் நூலிலும், ஜயதேவர் எழுதிய கீத கோவிந்தத்தைப் 'பாட்டிலுயர் பாட்டு' (Song of Songs) என்னும் நூலிலும் ஆக்கியமைத்துள்ளார். எலியட்டு (T. S. Eliot) என்பாரோ, விஷ்ணுபுராணத்தின் மேற்கோள்கள் பலவற்றைத் தமது நூலில் (Waste Land) பயன்படுத்தி, "ஓம் தத் ஸத்! சாந்தி சாந்தி சாந்தி!" என்னும் சொற்களுடன் அந்நூலை முடிக்கிறார். சோமர்செட் மாஹம் (Somerset Maugham) என்பார், The Razor's Edge என்னும் தமது நூலில் இந்தியத் தத்துவ ஞானத்தை மேனாட்டாருக்குப் புகட்ட முற்படுகின்ற நிலையைப் பார்க்கின்றோம். தமிழ் நெஞ்சமாகிய திருக்குறள் ஆங்கிலத்திலும் ஏனைய ஐரோப்பிய மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு, இந்தியப் பண்பாட்டின் உயர்நிலையாகிய தமிழ்ப் பண்பாட்டை வையகமெல்லாம் வாரி இறைக்கக் காண்கிறோம்.

---

# 10. நாட்டுப் பாடல்களில் வரலாறு

*“ கிச்சுக்கிச்சு தம்பலம் கியாகியா தம்பலம்*
*மாச்சுமாச்சு தம்பலம் மாயாமாயா தம்பலம் ”*

என்றுசொல்லி மணல் தரையில் மகிழ்ந்தாடும் குழந்தைகள் முதற்கொண்டு முதியவர்கள் ஈருகப் பாடிப் பரவசமடையும் நாட்டுப் பாடல்கள் பல திறப்பட்டவை; பல்சுவை பயப்பவை. இயற்கையின் இன்பக்காட்சிகளையும் வாழ்க்கையின் பல்வேறு நிகழ்ச்சிகளையும் பருகிய நன் பயனுக உள்ளத்தூறுகின்ற கருத்துக்களைச் செஞ்சொல் ஓவியங்களாக வடித்தெடுக்கின்ருர்கள், செந்நாப்புலவர்கள். அவர்கள் அவ்வாறளிக்கின்ற அருஞ்செல்வங்களைத் துய்த்துக் களிக்கும் ஆற்றலை, எல்லோரும் எளிதிலே பெற்றுவிடலியலாது. மொழிப்பயிற்சியும் அழகுணர்ச்சியும் ஒருங்கே கைவரப்பெற்ற மக்களே உயர்ந்த நிலையிலுள்ள இலக்கியங்களை உய்த்துணர்ந்து பாராட்ட முடியும். ஆனல், அழகுணர்ச்சி என்பது கற்றறிந்த கவிஞர்களுக்கு மட்டுமுரிய தனி உடைமையன்று. படித்தறியாத பாமரமக்களுக்கும் கண்ணும் காதுமுண்டு; உள்ளமும் வாயுமுண்டு. ஆகவே, அவர்களும் தாங்கள் கண்ணுரக் கண்ட காட்சிகளையும், காதாரக் கேட்ட செய்திகளையும், மனமாரத் துய்த்து வாயாரப் பாடி வந்திருக்கிருர்கள். அவர்களுக்குத் தெரிந்த சொற்களைக் கையாண்டு, அவர்களுக்குரிய முறையிலே இன்பத்தையும் துன்பத்தையும் வெளியிட்டு வந்திருக்கிருர்கள்.

பரந்த கடலிலே படகு விடுவதற்கும், வயலுக்கு நீர் பாய்ச்சி வளங்காண்பதற்கும், கும்மியடிப்பதற்கும், குரவையாடுவதற்கும், குழந்தைகளைத் தாலாட்டுவதற்கும், அக்

குழந்தைகள் சாய்ந்தாடுவதற்கும் சப்பாணி கொட்டுவ தற்கும், காதல் கனிய உரையாடுவதற்கும், சாவின் போது ஒப்பாரி வைப்பதற்கும், மண்டைக் கனமிறங்கக் கிண்டல் செய்வதற்கும் மக்கள் பயன்படுத்திய பாடல்கள் நாடெங்கும் பரந்து கிடக்கின்றன. பெரும்பாலும், பாடி யோர் பெயர் தெரியாமல், ஏட்டிலே தீட்டப் பெருது, எழு தாக் கிளவிகளாக, நாட்டு மக்களின் உள்ளங்களிலே உறைந்துள்ள இத்தகைய பாடல்களைத்தான் நாட்டுப் பாடல்கள் என்றும் நாடோடிப் பாடல்கள் என்றும் வழங்கி வருகிருேம்.

இவற்றுள் சரித்திரக் கதைகளைக் கூறும் நாட்டுப் பாடல்கள் ஒரு தனி இனமாய் அமைந்துள்ளன. மனப் பாடம் செய்துகொள்ள முடியாத அளவுக்கு நீண்டிருக் கின்ற காரணத்தால், புராணக் கதைகளையும், சரித்திரக் கதைகளையும் கூறும் நாட்டுப் பாடல்கள் ஏட்டிலே தீட்டப் பட்டிருக்கின்றன. அல்லியரசாணி மாலை, புலந்திரன் களவு மாலை, காத்தவ ராயன் கதை, நல்ல தங்காள் கதை, பவளக்கொடி முதலியவற்றைப் புராணக் கதைகளைக் கூறும் நாட்டுப் பாடல்களாகக் கருதலாம். சரித்திரக் கதைகளைக் கூறும் நாட்டுப்பாடல்களுள் மிகச் சிலவே இன்று உரிய முறையில் பதிப்பித்து வெளியிடப்பட்டுள் ளன. தேசிங்குராசன் கதை, ராமப்பையன் அம்மானை, இரவிக் குட்டிப்பிள்ளைப் போர், கட்டபொம்மன் கதை என்பவற்றை ஆராய்வது வழியாக நாம் இவ்வகை நாட் டுப் பாடல்களின் இயல்புகளை அறியலாம். செஞ்சி மன்னன் ஜெயசிங்கு, சேதுக்கரை வன்னி, வஞ்சித் தளபதி இரவி, பாஞ்சாலங்குறிச்சியின் வீரபாண்டியக் கட்டபொம் மன் ஆகிய நான்கு மாவீரர்களின் வீழ்ச்சி, முறையே இந்

நான்கு பாட்டுக்களிலும் காட்டப்படுகின்றது. இவை நான்கும் ஆங்கிலேயர்கள் நமது நாட்டில் அடியெடுத்து வைக்கத் தொடங்கிய பின் நிகழ்ந்த நெஞ்சுருக்கும் நிகழ்ச்சிகளாகும். வீரத்தைப் போற்றிய தமிழகம் வீர மரண மடைந்த தீரர்களைப் பாட்டுருவிற் கண்டு பாராட்டுவது பொருத்தந்தானே!

தென்னுற்காட்டு மாவட்டத்தில் அமைந்துள்ள செஞ்சியின் வரலாற்றுச் சின்னங்கள், அரசினரால் இன்றும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இங்கேதான் தேசிங்கு ராசன் ஆட்சி செலுத்தினன். நாட்டு வளத்தைப் பாட்டே காட்டுகிறது.

"செந்நெல் கதிர்பருத்துச் செழித்து வளர்கிறதும்,
கன்னல் கொழுத்துக் காட்டை மறப்பதுவும்,
வன்புலியும் பசுவும் மருவியே வாழ்கிறதும்,
தென்புடனே யானை செழித்துத் திரிகிறதும்,
காடை கவுதாரி காட்டுப்புரு கூவுறதும்,
பேடை மயில்கூடிப் பிரிய மடைகிறதும்,
புன்னை பலாச்சோலை பொருந்தி நிறைந்திடலும்,
சந்தனச் சோலைகளும் சாதிமல்லி பூத்திடலும்,
மந்தாரை கொங்கு மல்லிகைப்பூச் சாலைகளும்,
தாமரைப் பொய்கைகளும் தடாகமுள்ள ஏரிகளும்,
வாமமுறும் கான்யாறும் வாய்ப்புகளு மென்ன
சொல்வோம்!"

இத்தகைய வளமார் நாட்டைத் தரணிசிங்கு ஆண்டு வரும்போது, டில்லி பாதுஷாவுக்குக் கிடைத்த பாராசாரிக் குதிரையை அடக்குவதற்கு அவனுக்கு அழைப்பு வருகிறது. கருவுற்றிருந்த மனைவி ரமாபாயைப் பிரிந்து

செல்கிருன் தரணி சிங்கு ; குதிரையை அடக்க முடியாமற் போகவே சிறையில் சிக்கிவிடுகிருன். செஞ்சியில் ரமாபாய் தேசிங்கைக் கருவுயிர்த்து வளர்த்து வருகிருள். இஸ்லாமிய இளவல் மகபத்கான் என்பான், தேசிங்கின் ஆருயிர் நண்பனுய் அமைகிருன். தந்தையின் நிலேயைச் செவியுற்ற சிறுவன் தேசிங்கு, நண்பனுடன் டில்லிக்குச் சென்று பரிமாவையடக்கிப் பரிசுகள் பெற்றுத் தந்தையை மீட்டுத் திரும்புகின்ருன். அதற்குப் பின், ஆற்காட்டு நவாபு சைதுல்லா, இறைபெருத காரணத்தால் தோன்ற மல்லனேத் தூதனுப்பிப் பாளேயக்காரர்களுடன் படை திரட்டி வருகின்ருன். தேசிங்கு ராசனும் போருக்கு ஆயத்தமாகின்ருன். மன்னன் நிலேயறிந்த மகபத்கான் மணப்பந்தலிலிருந்து ஓடோடி வந்து, நண்பனுக்காக வீரப்போர் புரிந்து மடிகின்ருன். ஆருயிர் நண்பனே இழந்த தேசிங்கும் எதிர்ப்படைகளேக் கருவறுத்து உயிரிழக்கின்ருன். கணவனது வீரமரணத்தையறிந்த வீர பத்தினியும் நெருப்பிலே குதித்து உயிரை மாய்க்கின்ருள். இதுதான் கதைச் சுருக்கம்.

இக்கதை இன்றும் பாமர மக்களின் பாரகாவியமாகப் பரிணமிக்கின்றது. நாட்டுப்புற மக்களின் தமிழ்ச் செவிக்குப் பொருந்திய முறையிலே பிற மொழிச் சொற்களெல்லாம் மாறிவிடுகின்றன. 'ராஜா ஜெயசிங்,' தேசிங்கு ராசனுகக் காட்சி தருகிருன், 'மகபத்கான்' மோவுத்துக்காரனுக மாறிவிடுகின்ருன். வழக்கிற்புகுந்த பிற மொழிச் சொற்கள் பல, இதனுள் காணக்கிடக்கின்றன. ஜல்தி, பல்டி, கமான், மோர்ஜா, கார்பார், சமேதாரு, ஷராப், ரேஷக்காரன், ஊறுடாருய் என்பன அவற்றுள் சில. பாமர மக்களின்

மனத்தைக் கவர்வதில் ஆற்றல் மிகுந்த இரட்டைக் கிளவி கள் பலவிடங்களில் கையாளப்பட்டுள்ளன.

"திமிதிமி திமிதிமி திமிதிமியென்று சேனை நடந்திடவே;"

"கனகன கனகன கனகனவென்று கத்திகள் மின்னுது;"

"தடதட தடதட தடதடவென்று தமுறு முழங்குதுபார்!"

இவை போன்ற தொடர்கள் படிப்போர் உணர்ச்சிகளைக் கிளறுவன போல அமைந்துள்ளன. ஊரறிந்த பல உவமைகளும், தொடர்களும், எதுகை நயங்களும் கருதிய பயனை விளைத்து நிற்கின்றன.

"கொள்ளு குத்தின உலக்கை போல முன்னே நின்றானும்."

"எள்ளுப் போட்டால் எள்ளு விழாது நவாபு பாளையத்தில்."

"கதறிப் பதறிச் சிதறி யோடக் கரிகளை வாட்டுகிறேன்!"

இன்னுஞ்சில தொடர்கள் பல முறை பயின்று வருகின்ற காரணத்தால் கதையைக் கேட்டு முடித்த பின்னரும் நம் காதுகளிலே எதிரொலித்து நிற்கின்றன.

"அந்தச் சொல்லைக் காதிலே கேட்டான் ராசா தேசிங்கு."

"அண்ணு வாடா தம்பி வாடா மோவுத்துக் காரா நீ."

"லகானை யிழுத்துச் சிமிட்டாக் கொடுத்தான் ராசா தேசிங்கு"

இவற்றையெல்லாம் எளிதிலே மறந்துவிட முடியாது. ஒரு தொடரிலே கூறி முடிக்கத் தக்க நிகழ்ச்சிகளைப் பல தொடர்களால் விளக்குவது வழியாக, கேட்போர் உள்ளத்திலே ஓர் ஓவியமே உருப்பெறக் காண்கிறோம். டில்லியிலே பாராசாரியைக் கண்டு மன்னர்க

ளெல்லாம் அஞ்சினுர்களென்பது பல தொடர்களால் விளக்கப்பட்டுள்ளது.

" குதிரை கனைத்த சத்தத்தி னுலே
தொப்பென்று விழுந்தார்கள் ;
அண்டம் இடிந்து விழுந்தாற் போலே
அலறி விழுந்தார்கள் ;
கோடை யிடித்து விழுந்தாற் போலே
குப்புற விழுந்தார்கள்.
முன்னே யிருந்த ராச துரைகள்
மிரண்டு விழுந்தார்கள்.
பின்னே யிருந்த ராச துரைகள்
பிரண்டு விழுந்தார்கள்,''

கூறவேண்டிய செய்தியை அப்படியே உள்ளதை உள்ளபடி கூறிவிடாமல், அதற்குக் கையும் காலும் வைத்து அழகுபடுத்தி மிகைபடக் கூறுவது மக்களியல்பு. அத்தன்மையையும் இக்கதையில் காணலாம். தேசிங்கு பிறந்ததையும் பின்னர் நண்பனுடன் வளர்ந்ததையும் கூறும் பகுதி அதற்கோர் எடுத்துக் காட்டு.

" குழந்தை பிறந்த ஏழாம் மாதம்
குலுங்கி விழுந்தானும்;
தொட்டிலே விட்டுக் கீழே இறங்கித்
துள்ளி விழுந்தானும்;
தங்கத் தொட்டிலே எட்டி யுதைத்துத்
தரையில் விழுந்தானும்;
பத்தாம் மாதம் தவழ்ந்து நடந்தான்
பருவம் அறியவேதான்;''

... ... ... ... ...

"காடு மலைகள் செடிக ளெல்லாம்
கலங்க வடித்தாராம்
புலிகள் கரடி சிங்கத்தைக் கண்டால்
புகுந்து வெட்டுவாராம்
சங்கரா பரணிக் கரையிலே வந்து
தாண்டிக் குதிப்பாராம்
குதிரையை விட்டுக் கீழே யிறங்கிக்
குஸ்திகள் செய்வாராம்
மண்டிகள் போட்டு மலைகளைத் தூக்கி
வாரி யடிப்பாராம்
மலைகளை யோங்கிக் குத்தினு ராகுல்
மருந்து புகைகௌவும்
செடிகளை யோங்கிக் குத்தினு ராகுல்
சிதைந்து முறிந்துபோகும்."

இவ்வாறு இக்கதையினுள் வீரச்சுவையே விஞ்சிநிற்கிறதென்னலாம். டில்லி சென்று பாராசாரியை அடக்குவதில் தேசிங்கின் வீரம் உச்சநிலையடைகிறது. பூசைமுகத்திருந்த தன்னையணுகி, நவாபுவுக்கு அடி பணியக் கூறும் சிற்றப்ப ராசனை நோக்கி, தேசிங்கு ஆத்திரங் கொள்கிருன்.

"என்ன பேச்சுப் பேசினீ ரையா
சிற்றப்ப ராசாவே!
அறுபது வயது சென்றது உமக்கு
அறிவு கொஞ்சமில்லை."

இவ்வாறு பேசிய அவனது வீரத்தின் எழுச்சி அவனது அருமைக் கடவுள் அரங்கநாதரைக்கூட விட்டு வைக்க

வில்லே. வீரர்கள் முன் வைத்த காலைப் பின் வைக்க மாட்டார்களல்லவா ? ஆகவே, அரங்கநாதரிடம் விடை பெறச் சென்ற தேசிங்கு, கண்ட மாலை கருகுதல், கண்ணீர் கசிதல், திருவிளக்கவிதல் போன்ற தீச்சகுனங்களைக் கண்டு ஆத்திரமடைந்து பேசுகின்றான் :

*" உமக்கென்ன கேடு வந்தது சாமி ரங்க நாதரே!*
*நானல்லவோ பயப்பட வேண்டும் ரங்க நாதரே!*
*நீர் சொன்னால் நான் பயப்படு வேனே ரங்க நாதரே!*
*நீர் சாகவு மாட்டீர் பிறக்கவு மாட்டீர் ரங்க நாதரே!*
*ஒரே ஜனனம் எடுத்தீ ரையா ரங்க நாதரே!''*

தேசிங்கு ராசன் கதையின் உயிர்நிலை, ‘தேசிங்கு மகபத்கான் நட்பு’ என்று குறிப்பிடுவது குற்றமாகாது. வழுதாவூரிலே புது மணக்கோலத்துடன் வீற்றிருந்த வீரன் மகபத்கான், தாலிகட்டும் தருணத்தில் அன்பனுக்கு ஆபத்தென்பதையறிந்து, பட்டா உருவிக் கையிற்பிடித்து, ‘தாய் தடுத்தாலும் விடேன்!’ என ஓடிவந்து நவாபுவின் படையைக் கருவறுத்துக் களத்திலே மடிந்ததும், தோழன் இறந்த துயர் தாளாத ஜயசிங்கு,

*'' என்னுடன் வளர்ந்த தம்பி தானும்*
*இறந்து போய்விட்டான்!*
*என்றன் பலமும் பாதி போச்சுது!"*

எனக் கூறி வீரப்போர் புரிந்து, வாளில் வீழ்ந்து உயிர் துறந்ததும், நட்பின் உயர்வையும் நாட்டுப் பண்பையும் நன்கெடுத்துக் காட்டுகின்றன. இவ்விரு தோழர்களின் வீர மரணமும், அரசி அனலிற்பாய்ந்து

உயிரை மாய்த்ததும், அப்பத்தினிப் பெண்ணின் நினைவுக்காக நவாபு சைதுல்லா ஆற்காட்டிற்கு அண்மையிலே இராணிப்பேட்டை என்னும் நகரம் நிறுவியதும், மக்கள் மனங்களிற் பதிந்துவிட்டன. ஆற்காட்டு நாவாபுவுக்கு இறை செலுத்துவோராக இக்கதையினுள் கூறப்படும் சேத்துப்பட்டுத் தாவுத்துக்கான், திருவண்ணாலை சுபங்கி துரை, கள்ளக்குறிச்சி கான்சாகிபு, மதுரைச்சீமை மலையாளத்தான், அரியலூர் பெரியதுரை, திமிரிக்கோட்டை சேக்கு முகம்மது ஆகியோரின் பெயர்கள் வரலாற்றிற்குத் துணை புரிவன.

பதினேழாம் நூற்றுண்டில் மதுரையம்பதியிலிருந்து ஆட்சி செலுத்திய திருமலைநாயக்கரின் தளபதி இராமப்பையனின் வெற்றியையும், சேதுக்கரைச் சிங்கம் வன்னியின் வீழ்ச்சியையும் விளக்கிக் காட்டுவதுதான் **இராமப்பையன் அம்மானை.** தளவாய் சேதுபதி என்னும் பெயருடன் சேதுக்கரைப் பகுதிகளையாண்ட இரண்டாம் சடைக்கத் தேவனையடக்கிப் பிடிப்பதற்காக மன்னனின் ஆணையினையும், அங்கயற்கண்ணம்மையின் அருளையும், அண்ணன் வயித்தி ஐயனின் உடன்பாட்டையும் பெற்றுப் படையெடுத்துச் செல்கின்ருன் இராமப்பையன் ;

“சேதுக் கரைதனிலே சென்றவர்கள் மீண்டதில்லை ;
வாளுக் கிரையிட்ட மன்னன் வலுக்காரன் ;
துப்பாக்கி மெத்தஉண்டாம் தோலா மறவனுக்கு ;
தன்னரசு நாடும் தனிக்கோட்டை யாளுவனும் ;
மதுரைப் படையென்ருல் மதியான் மறவனுந்தான்.”

இவ்விதமாக எச்சரிக்கை செய்து அனுப்புகின்ருன், மன்னன் திருமலை நாயக்கன். ‘சடைக்கனைக் கட்டிக்கொடு

வருவேன்!' எனச் சூளுரைத்துச் செல்கின்றான் தளபதி. சின்ன ராவுத்தர் பாளையம், வண்டியூர்க்கோட்டை, திருப்புவனம், மானமதுரை வழியாக மதுரைப் படை வானரவீரமதுரை அடைகின்றது. படையெடுப்பைச் செவிமடுத்த சடைக்கன் கூறும் வஞ்சினம் குறிப்பிடத்தக்கது, "இராமப்பையனின்,

கண்ணைப் பிடுங்கிக் காட்டிலே யோட்டாட்டால்
என்பெயர்தானு சடைக்கன்? எடுத்ததுவும் ஆயுதமோ ?
பின்குடுமி தன்னில் பேருலகு தானறியத்
தேங்காயைக் கட்டிச் சிதற அடியாட்டால்
என்பெயர்தானு சடைக்கன்? எடுத்ததுவும் ஆயுதமோ?"

சடைக்கத்தேவன் மருகன் வன்னியென்பான், வீரவுரை பகர்ந்து, 'நாடு கலக்கி' என்னும் பரிமீதிவர்ந்து, பல ஊர்களைக் கடந்து, பல கோட்டைகளுக்கும் படைகளை வகுத்தனுப்பி, அரியாண்டிபுரக் கோட்டையின் வெளியிலும், போகலூர்க் கோட்டையின் வெளியிலும் போர் புரிந்து வெற்றி பெற்றுப் படை வீரர்களுக்குப் பரிசளித்துச் சடைக்கனிடம் செல்கின்றான். பின்னர்ப் பாம்பாற்றங்கரையில் வந்த மதுரைப் படையுடன் போர் செய்த சடைக்கன், காயமுற்று, மருகனுடன் இராமேசுவரத்தீவை அடைகிறான்.

இதற்கிடையே இராமப்பையன் வடபாற்சென்று, முகிலரை வென்று திரும்புகின்றான். பின்னர்ப் போகலூர்க் கோட்டையை முற்றுகையிட்டு, சடைக்கனைச் சார்ந்த அழகனையும் குமாரனையும் மிகக் கொடிய முறையில் கொல்கின்றான். இதற்கிடையே இராமேசுவரத் தீவையடைவ

தற்கு அணை கட்டப்படுகின்றது. அரசர் முதலியோர் கல் சுமக்க அணை கட்டுவதைக் காட்டும் பகுதி நகைச்சுவை பயப்பதாகும். பரங்கியருடன் ஒப்பந்தம் செய்து மூன்று நாள் கடும்போர் நிகழ்கிறது. மூன்று நாட்களும் வன்னியே வெற்றி பெறுகின்றான். திடீரென வன்னிக்கு அம்மை நோய் காண்கிறது. நான்காம் நாள் பாம்பன் துறைவாடியில் நடந்த போரில், நோய்வாய்ப் பட்டிருந்த வன்னி, வீரத்துடன் போராற்றித் திரும்பி, மெத்தையில் சாய்ந்திறக்கின்றான். மறைந்த மாவீரனின் வேண்டுகோட்படி இராமப்பையனுக்குத் தூதனுப்பிப் பணிந்துவிடுகின்றான் சடைக்கன். வெற்றிச் செருக்கிலே திளைத்த இராமப்பையன், முன்னாள் வஞ்சினத்தை நினைவூட்டிச் சடைக்கனை எள்ளி நகையாடி, மதுரைக்கழைத்துச் செல்கிறான். மதுரையில் திருமலை நாயக்கனுக்கு முன்னர்,

> "என்மருகன் வன்னி இருந்தானே யாமாகில்
> தேவரீர் பாதம் தெரிசிக்க மாட்டேன்!"

என்று கூறிய சடைக்கன், சிறையில் தள்ளப்படுகின்றான். இராமப்பையனுக்குக் 'கனகாபிஷேகம்' செய்யப்படுகின்றது. சிறையிலிருந்த சடைக்கனைப் பிணித்திருந்த விலங்கு ஒரு நாள் தெறித்துவிடவே, அது மாயனருளால் நிகழ்ந்த தெனக் கருதி நாயக்கன் அவனை விடுவித்துச் சிறப்புச் செய்து அரசுங்கொடுத்து அனுப்பி வைக்கின்றான்.

இக்கதைத் தலைவனாய் அமைந்த இராமப்பையன் வஞ்சி நாடு சென்று இரவிக்குட்டிப் பிள்ளையை வென்ற

செய்தி, 'இரவிக்குட்டிப் பிள்ளைப்போர்' என்னும் நாட்டுப் பாடலுள் இடம் பெற்றுள்ளது. தமிழகத்தின் தென்பகுதியிலிருப்போர் போற்றி வளர்க்கும் வில்லுப்பாட்டுக் கலைக்கு இக்கதை இன்றும் தனி மதிப்பளித்து வருகிறது. சம்சாரித்தல், ஒருங்ஙி, முறவிளி, முஷியாமல், கல்பன, ஸம்மானம், செறுக்கன் போன்ற பல மலையாளச் சொற்கள் இக்கதையில் அமைந்திருப்பது காரணமாகவும், சில இடங்களில் மலையாளச் சொற்றொடர் அமைப்புக்கள் வருவது காரணமாகவும் மலையாளிகளும் இதற்கு உரிமை பாராட்டுவதுண்டு. இரவி போருக்குச் செல்வதைத் தடுக்கும் அன்னையின் உரை, உருக்கமானதாய் அமைந்துள்ளது.

"என்மகனே பொன்னுரவி இன்றுபடை போக வேண்டா ;
கன்மவினை பொல்லாது கனவுகண்ட சொப்பனங்கேள் ;
வாதுக்கல் நீராழி வரம்பிடிந்து விழவுங் கண்டேன் ;
தாதுற்ற பூங்குழலாள் தலைவிரித்து நின்றிடவும்
மோதித் தலைசாய்ந்து முறவிளி கொண்டிடவும்
சாதித்த வாணுதலாள் தக்கசுரல் ஆலோலம்"

இவ்வாறு அன்னையும் மனைவியும் தடுத்துரைத்த மொழிகளுக்கு மறுமொழி உரைத்துவிட்டு, தீச்சகுனங்களையும் பொருட்படுத்தாது, பருத்திவிளைப்போரில் எதிரிப் படைகளைக் கருவறுத்து உயிர் துறக்கின்றான் இரவி. கொய்து வரப்பட்ட இரவியின் தலையைக் காளி நாயர் கைவழி வஞ்சி மன்னனுக்கு அனுப்புகின்றான் இராமப்பையன். இரவியின் உடல் வஞ்சி மன்னனால் பல்வகைச் சிறப்புடன் மறைவு செய்யப்படுகின்றது.

ஆங்கில ஏகாதிபத்தியத்தின் பிடரி மயிரைப் பிடித்தாட்டி வீர மரணமடைந்த தீரர்களின் வரிசையில் அமைந்து, பாண்டி மண்டலத்தின் ஒரு பகுதியாகிய பாஞ்சாலங்குறிச்சியின் ஆட்சிக்கு மாட்சியூட்டிய கட்டபொம்மன், ஊமைத்துரை ஆகியோரின் விடுதலைப் போர் வரலாற்றை விளக்கமுறக் கூறுவது, கட்டபொம்மன் கதை.

நெல்லை மாவட்டத்தைச் சார்ந்த பாஞ்சாலங்குறிச்சியும், எட்டயபுரமும் நெடுங்காலம் ஒற்றுமையுடன் வாழ்ந்த இரு பாளையங்கள். கி. பி. 1792-ஆம் ஆண்டு ஆங்கிலேயரின் 'சர்வே செட்டில்மெண்டு' என்னும் நில அளவைத் திட்டத்தின் பெயரால், பாஞ்சாலங்குறிச்சிக்குச் சொந்தமான அருங்குளம், சுப்பலாபுரம் என்னும் இரு ஊர்களும் எட்டயபுரத்தில் சேர்க்கப்பட்டன. இதன் விளைவாக இரு பாளையங்களுக்குமிடையே பகை வளர்ந்தது. ஆங்கிலேயரின் முடிவுக்கெதிராகப் பாஞ்சைப்பதியினர் புரட்சி செய்தனர். எட்டப்ப மன்னன் இச்செய்தியை ஆங்கிலேயருக்கு எட்டச்செய்தான். ஆங்கிலக் கம்பெனியார் ஆணைப்படி இராமநாதபுரக் கலெக்டர் ஜாக்ஸன், ஆங்கிலேயர்களின் பாசறையாய் விளங்கிய பாளையங்கோட்டை சென்று, பாளையக்காரர்களைக் கூட்டி ஆலோசனை நடத்தினன்; பின்னர், இராமநாதபுரத்தில் தன்னை வந்து காண்பதற்காகக் கட்டபொம்மனுக்குக் கடிதம் அனுப்பினன்.

கட்டபொம்மன், தன் படைகளுடன் புறப்பட்டு, இராமநாதபுரமடைந்து, படைகளை வெளியே விட்டுத் தம்பி ஊமைத்துரையுடனும் அமைச்சர் தானபதிப் பிள்ளையுடனும் உள்ளே சென்ருன். வரி செலுத்தாமலிருந்ததை

யும், எட்டயபுரத்தைக் கொள்ளையிட்டதையுங் கூறி ஜாக்ஸன் குற்றஞ்சாட்டவே, கட்டபொம்மன் அதனை மறுத்து வீர உரையாற்றினன். உடனே மூவரும் கைது செய்யப்பட்டனர், வெளியிலிருந்த வீரன் பாதர்வெள்ளை, செய்தியறிந்து, உள் நுழைந்து, கட்டபொம்மனையும் ஊமைத்துரையையும் தந்திரமாக விடுவித்தான். உள்ளே சிக்கிய தானுபதிப் பிள்ளையும் விசாரணைக்குப் பின் விடுதலையானர். ஜாக்ஸனுக்குப்பின் லூஷிங்டன் கலெக்டரானன். ஒரு சிறு அமைதி நிலவிற்று. மீண்டும் குற்றச்சாட்டுகள்! கலெக்டர் லூஷிங்டனைப் பேட்டி காண மறுத்ததற்கும் பாண்டித்தேவனைக் கொலை செய்ததற்கும் காரணம் வினவிவந்தான், பிரிகேட்துரை. கட்டபொம்மன் விசாரணைக்காகப் பாளையங்கோட்டை செல்ல மறுக்கவே, பாஞ்சாலங்குறிச்சியைத் தாக்கிக் கட்டபொம்மனைக் கைது செய்ய ஆங்கிலேயர், மேஜர் ஸ்மட்ஸ் என்பான் தலைமையில் ஒரு பெரும்படையை அனுப்பினர். உடனே சரணடைய வேண்டுமென்றும், மறுத்தால் போர் மூளுமென்றும் வெள்ளையர் கூறினர். கட்டபொம்மனின் தூதுவன் சுந்தரலிங்கம், வெள்ளையர்பாற்சென்று, பாஞ்சை மண்ணில் பரங்கிப் படைகள் அடியெடுத்து வைத்ததே அடாதெனக் கூறினன் ; சுட்டுக்கொல்லப்பட்டான் ; போர் மூண்டது ; புதுமணம் புரிந்த மணமகன் பாதர்வெள்ளை, பாஞ்சையின் நிலை கேட்டுப் படுகளங்காண ஓடோடி வந்தான் ; வீரப்போருடற்றினன்; காலன் துரையைக் காலனுக்கிரையாக்கித் திரும்பும்போது, செத்தவன்போலப் படுத்திருந்த ஒருவன் குறி வைத்துச்சுட, இறந்துவிட்டான். மறுநாளும் வெள்ளையருக்கீடான படையின்றியும், பாஞ்சை மக்கள், நாட்டுப்பற்று நாடி முறுக்கேற்ற, வியத்தகு போர் விளைத்தார்கள். கட்டிய கோட்டை இடிந்தும்

கட்டபொம்மன் மனந்தளராமல் போரிட்டான். ஊமைத் துரையும் நெற்றியில் ஆழமான வெட்டுக்காயத்துடன் திரும்பினுன். கருப்பன் என்பான் வெள்ளையரை எதிர்க்கக் காட்டிய வீரம் உள்ளத்தைக் கொள்ளை கொள்வதாகும்:

*" சரிந்த குடலைவ யிற்றுக்குள் வைத்து*
*சல்லாச் சோமனை மேலேசுற்றி*
*வரிந்து வரிந்து மாருப்புக் கட்டி*
*மண்டி போட்டெழுந்து துடைதட்டி*
*விரைந்து விரைந்து கும்பினிப் படையை*
*விரட்டி யடித்துச் சாய்க்கிருன்*
*குதிரை யேறி யெதிரே வருவோரைக்*
*குத்தியே குப்புற மலத்துவான்."*

இந்நெருக்கடியான நிலையைக் கண்டார் தானுபதிப் பிள்ளை; 'சிட்டுப்பறக்காத பாஞ்சால நாட்டில் சீரழிவு மெத்த ஆச்சுதென்ருர்.' 'பொன்வாடை வீசிய பாஞ்சால நாட்டில் பிணவாடை வீசுதென வுரைத்தார்'. கோட்டைக்குள்ளிருந்து போரிடுவதைக்காட்டிலும், கோட்டையை விட்டு வெளியேறி, வீரர்களைத்திரட்டிப் போரிடுவதே நலமெனக்கூறித் திட்டமும் தீட்டிக் கொடுத்தார். மன்னர் குடும்பத்தினர் மையிருளில் கோட்டையை விட்டு வெளியேறினர். ஆருத்துயர் சுமந்து நாகலாபுரமடைந்தார். செய்தியறிந்த வெள்ளையர் படை அங்குற்றுத் தானுபதிப் பிள்ளையின் தலையினை வெட்டிப் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை வாயிலிலே வைத்தது. திருக்களம்பூர்க் காட்டிலே கைது செய்யப்பட்ட கட்டபொம்மன், கயத்தாற்றில் பானர்மேன் தலைமையில் விசாரணை செய்யப்பட்டான். சிறைப்பட்ட சிங்கம் சீறிக் கொதித்தது; தூக்கிலிடப்பட்டது.

" கட்டைப் புளிய மரந்தனி லேதுரை
கட்டபொம் மேந்த்ரனைத் தூக்கினராம்;
மொட்டான பாஞ்சைத் துரைவீர பாண்டியக்
கட்டபொம் மன்உயிர் போக்கினராம்."

ஊமைத்துரையைச் சிறைப்படுத்திப் பாளையங்கோட்டைக்குக் கொண்டு சென்றனர். ஆனால், உற்றார் செய்த புரட்சியினால் ஊமைத்துரை விரைவில் விடுதலையாயினான். பாஞ்சைப்பதியடைந்து பாழடைந்த கோட்டையை,

" வரகு வைக்கோல் தான்சேர்த்து அதில்
மண்போட்டுச் செம்மித் தான்மிதித்து
திறமுடன் கம்மங் கொம்மைகளைப்போட்டுச்
செப்பமிட் டுமதில் ஒப்பமிட்டு
பஞ்சுப் பொதிகளை ஊடேவைத் துக்கம்பங்
கஞ்சிப் பசைகளைத் தான்கொடுத்து
அஞ்சிப் புவியோர்கள் கொண்டாட "

ஆற்றல் சான்றதாக்கிய ஊமைத்துரை, மீண்டும் போர் முரசங்கொட்டினான்; சிவகங்கைச் சின்ன மருது, பெரிய மருது ஆகியோருடன் சேர்ந்துகொண்டான்; இறுதியில் சிறை செய்யப்பட்டுப் பாஞ்சாலங்குறிச்சிக்குக் கொண்டு போகப்பட்டுத் தூக்கிலிடப்பட்டான்.

இதுதான் பாஞ்சைப்பதி வீரர்கள் நாட்டு வாஞ்சையால் நடத்திக்காட்டிய வீரப்போர் வரலாற்றின் சுருக்கம். காதைச் சுடுகின்ற இக்காதையைக் கேட்டு முடித்த பின்னரும், விடுதலையுணர்வுடன் பொங்கி எழுந்த அவ்வீரர்களின் உரைகள் நம் செவிகளில் எதிரொலித்து நிற்கின்றன.

"வானம் பொழியுது பூமி விளையுது
மன்னவன் கும்பினிக் கேன் கொடுப்பேன்?
சீனிச்சம் பாநெல்லு ஏன் கொடுப்பேன்? அந்தச்
சீரகச் சம்பாநெல் ஏன் கொடுப்பேன்?
என்னைப்போல் வெள்ளாமை இட்டானோதுரை
இங்கிலீசு வெள்ளைக் காரனுந்தான்
மன்னவன் கும்பினி வந்தாக் கால்கத்தி
வாள்முனை யில்கிஸ்திப் பணமென்றான்."

வரி கேட்டு வந்த வெள்ளையனின் கடிதங்கண்டு புலி போலச் சீறியெழுந்த ஊமைத்துரையின் வாயிலிருந்து உணர்ச்சியில் தோய்ந்தெழுந்த இத்தகைய உரைகளை நாம் எப்படி மறக்க முடியும்?

இதைப்போன்ற வரலாறுகளைக் கூறும் பாடல்கள் பல, பனையோலைகளில் எழுதப்பட்டுச் செல்லுக்கிரையாகி அழிந்துவிட்டன. எஞ்சியிருக்கின்றவற்றையேனும் தேடிப் பிடித்துச் சீரிய முறையிற் பதிப்பித்து வெளியிடுவோர் நாட்டுக்கும் மொழிக்கும் நற்பணியாற்றிய பெருமையைப் பெறுவர்.

—

# 11. புதுப்புனல்

“ஆசைக்கோ ரளவில்லை ” எனத் தொடங்கி அரிய உண்மைகளை விளக்கிய தாயுமான அடிகளின் பாவடிகளைத் தமிழகம் நன்கறியும். அழியாத ஆசை, ஆருத ஆர்வம், மாருத வேட்கை, மாயாத விருப்பம்—இவை மனித இயல்பின் அடிப்படை. இவ்வடிப்படையில் மனித உள்ளம் புதுமையை நாடுகின்றது. இந்நாட்டத்தின் விளைவாக வாழ்வின் துறைகளனைத்திலும் வியத்தகு மாற்றத்தைக் காண்கிருேம். இயற்கைச் செல்வங்களில் எத்தகைய மாற்றமும் இல்லையென்பது உண்மையே. அனலும் புனலும், கல்லும் புல்லும், அல்லும் பகலும், புள்ளும் புழுவும், மாவும் மரமும், செடியும் கொடியும், கதிரும் மதியும், வானும் கடலும் எத்தகைய மாற்றமுமின்றி, முன்னுளிருந்தபடியே இந்நாளும் இருந்து வருகின்றன. இவ்வியற்கைப் பொருள்களின் நுட்பத்தை ஆராயும் மனிதனும், அதே கையும் காலும், கண்ணும் காதும், வாயும் வயிறும் பெற்று வாழ்ந்து வருகிருன். ஆனல், அவனது சிந்தனையின் ஆற்றலும், உழைப்பின் உயர்வும் மாநிலத்தையே மாற்றி வருகின்றன.

மனித முயற்சியின் உயர்ச்சியானது பாலை வனத்தைப் பசுஞ்சோலையாக்கியுள்ளது ; காடுகளை நாடாக்கியுள்ளது ; மலை குடைந்து வழி கண்டு, நிலங்குடைந்து நிதி கண்டுள்ளது ; விண்ணை முட்டும் இல்லங்களையும், கண்ணைக் கவரும் சாலைகளையும் சமைத்துள்ளது ; உண

விலே புதுமை! ஊர்தியிலே புதுமை! உடையிலே புதுமை! நடையிலே புதுமை! அணியிலே புதுமை! அனைத்திலும் புதுமை! மாணவருலகின் புதுமை மனங் கொள்ளத் தக்கது. கதிரோன் எழுமுன் கண் விழித்து, கடன் முடித்து நீராடி, ஏடெடுத்துக் கணக்காயரை யடைந்து, எழுத்தாணியால் பனையோலையில் எழுதிப் படித்து, குறிப்பறிந்தொழுகிக் கேட்டவை நினைத்துப் பாடம் போற்றி, இருவென இருந்து, எழுவென எழுந்து, செல்லெனச் சென்று பயின்று வந்தனர், பண்டைநாள் மாணவர். இந்நாள் மாணவரோ, பகலவன் அஞ்சப் பஞ்சணை விட்டெழுந்து, தேநீரருந்தி, அனைத்துக் கடன் களையும் அறையினுள் முடித்து, கருத்துக்கிசைந்த கண் கவர் நூலைக் கையினிலெடுத்து, ஊர்திகளிற் சென்று கல்லூரியடைந்து, மணியோசையியக்கப் புகை வண்டித் தொடர் போல அணி பெற வகுப்பினுள் நுழைந்து, உரிமை வேட்கை மிக உலாவித் திரும்புகின்றனர். இவ் வாறே, ஆடலிலும், பாடலிலும், மின்னியல், பொறி யியல், அணுவியல், அறிவியல், மருத்துவம் போன்ற அனைத்துத் துறைகளிலும் மக்கள் காட்டுகின்ற புதுமை வேட்கை வியத்தகு பயன்களை விளைத்துள்ளது.

இலக்கிய வரலாற்றில் இப்புதுமை வேட்கை விளைத் துள்ள அரும்பணியானது சிந்தையைக் கவர்வதொன் றும். இலக்கிய வளர்ச்சிக்கு இவ்வேட்கையே அடிப்படை யெனக் குறிப்பிடுதல் குற்றமாகாது. தமிழ் இலக்கியத் தின் நீண்ட கால வரலாறும், அவ்வரலாறு காட்டும் பல் வேறு இயல்புகளும் இவ்வுண்மைக்கு அரண் செய்வன. மிகு பழங்காலத்திலேயே, பண்டைத் தமிழர் வாழ்வின்

ஓவியமெனத் திகழும் தொல்காப்பியம், அரியதோர் இலக்கிய இலக்கணமாய் எழுந்தது. அதற்குப் பின்னர், வாழ்வின் பல் துறைகளுக்கும் வழி காட்டிப் பொலிவூட்டும் வளமார் இலக்கண இலக்கியமாகத் திருக்குறள் திகழ்ந்தது. வீரத்தையும் காதலையும் விழுமியவாகப் போற்றிய சங்ககால வித்தகர்கள், எட்டுத்தொகையையும் பத்துப் பாட்டையும் எழில் பொழியத் தந்தனர். துளங்காப் புலமை இளங்கோவடிகள் போன்றோர், அரும்புகழ்ப் பெருங்காப்பியங்கள் அளித்தனர். அப்பரும் சுந்தரரும் ஆளுடைப் பிள்ளையும் அருண்மொழி வாசகரும் அன்பு சொட்டப் பாடிச் சைவ நெறியைப் பரப்பினர். பத்திக் கடலில் மூழ்கிய ஆழ்வார்கள், தேசுலாவும் பாசுரங்கள் பொழிந்து வைணவத்தை வளர்த்தனர். கம்பரைப் போன்ற கவி வலார் என்றுமுள தென்றமிழின் எழிலினைப் பெருக்கினர். மெய்ப்பொருள் காண விழைந்த சித்தர்கள், சிந்தைக்கு விருந்தளித்தார்கள். பல் சமயக் கருத்துக்கள் பரவியிருந்த தமிழகத்தில் தாயுமான அடிகள் போன்றோர், சமரச கீதம் எழுப்பினர். உமறுப் புலவரின் சீறாவும், வீரமா முனிவரின் தேம்பாவணியும், முறையே அரபு நாட்டிலே தோன்றிய நபிகள் பெருமான் அவர்களையும், யூதேய நாட்டு இயேசுநாதர் அவர்களையும் தமிழகத்திற்கு அறிமுகம் செய்துவைத்தன. இவை மட்டுமன்றி, ஆனையாயிரம் அமரிடை வென்ற மானவர்மீது பாடப்பட்ட பரணிகள்; ஏழு பருவத்துப் பெண்களும் காதல் கூர உலாவரும் எழிலார் தலைவன்மீது பாடப்படும் உலாக்கள் ; பிஞ்சுமனக் குழவிகளின் நெஞ்சுயர்வறிந்து பாட்டுடைத் தலைவரைக் குழந்தையாகக் கண்டு போற்றும் பிள்ளைத் தமிழ்கள் ; பதினெண் உறுப்புக்கள் அமையக் கூறும் கலம்பகங்கள் ; கட்டளைக் கலித்

துறையால் அகப்பொருள் கூறும் கோவைகள்; பண்ணை வாழ்வைப் படம்பிடித்துக் காட்டும் பள்ளுகள்; மலைவளம் கூறி மனத்தைக் கவரும் குறவஞ்சிகள் என்றிவ்வாறு எத்தனையோ இலக்கிய வகைகள் பைந்தமிழ்ச் சோலையின் பசுமையைக் கூட்டுகின்றன. இந்நிலைக்குரிய அடிப்படைக் காரணத்தை ஆராய்வோர், புதுமை வேட்கையின் பயனை எளிதில் உணர்வர். முன்னோர் கையாண்ட முறைகளி லிருந்து ஒரு மாற்றத்தை விழைந்த பின்னோர் நெஞ்சமே, இப்பல்சுவைச் செல்வங்களைப் பயந்துள்ளது. இப் புதுமை புகாமலிருப்பின், தேன்சுவை இலக்கியம் தேங்கிக் கிடந்து தெவிட்டிப்போயிருக்கும்.

ஒரே பொருள் குறித்துப் பெருங்காவியங்கள் வரைய முற்பட்டோருக்கும் இவ்வேட்கையே உணர்ச்சியூட்டி யிருக்கிறது. சங்க காலத்தில் பெருந்தேவனாரொருவர் பாரதம் பாடியதாக அறிகிறோம். ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த பெருந்தேவனாரொருவர் வெண்பா யாப் பில் பாரதத்தைப் பண்பாகப் பாடினார். வில்லியார் அதனை விருத்தப்பாவால் விளக்கினார். நல்லாப் பிள்ளை யும் அரங்கநாதக் கவிராயரும் அத்துறைக்கே அணி செய்தனர். பாரத வசனம், பாரத நாடகம், பாரத கீர்த்த னம், அம்மானை, பாரத விலாசம், பாரத தாத்பரிய சங்கிர கம் போன்ற பல நூல்கள் எழுந்தன. எனினும், பாரதி யாரின் பாஞ்சாலி சபதத்தைப் படிக்கும்போது இலக்கியச் சுவையின் உயர்வினை உணர்கிறோம். பாரதியாரின் சிந்து நடை நமது சிந்தையைக் கவர்கிறது. அவரது கற்பனை யின் புதுமை நம்மைக் களி கொள்ளச் செய்கிறது. அவரது

உவமையின் உயர்வு நமக்கு வியப்பூட்டுகிறது. ஒரு குறிப்பிட்ட இலக்கியத்தின் வளர்ச்சியில் புதுமை கண்ட பயன் இது.

ஒரே எண்ணத்தை வெளியிட விரும்பிய புலவர் பலரும் இவ்வேட்கை மீதூர இலக்கியச் சுவையை இனிது பெருக்கியுள்ளனர். எடுத்துக்காட்டாகத் தமிழகத்தின் எல்லையைக் குறிக்க வந்த புலவர்களைக் காண்போம்: அவ்வெல்லையைக் குறிக்க அவர்கள் கையாளும் சொல்லை ஆராயும் போது, அவர்கள் வாழ்ந்த காலத்தின் இயல்பையும், அவர்தம் தனிப்பட்ட பண்பையும், அனைத்திற்கும் மேலாக அவர்களது புதுமை வேட்கையையும் அறிந்து மகிழ்கின்றோம். பழம்பெருநூலாம் தொல்காப்பியத்திற்குச் சிறப்புப் பாயிரம் வழங்க வந்த பனம்பாரனர்,

> " வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
> தமிழ் கூறு நல்லுலகம் "

எனக் குறித்தார். உள்ளதை உள்ளவாறே கூறும் பழங்காலத் தன்மை நவிற்சியின் இயல்பினை இத்தொடருள் காண்கிறோம். சித்திரச் சிலப்பதிகாரம் தந்த செஞ்சொல் லோவியரோ,

> " நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும் "

எனக் கனிவுடன் கூறிக் கற்பனையிலே அடியெடுத்து வைத்தார். பின்னர், இக்கற்பனையானது செழிப்புற வளர்ந்து பாரதியாரின் பாவடியில் பூத்துப் பொலிவதைப் பார்க்கிறோம்.

> " நீலத் திரைக்கட லோரத்திலே நின்று
> நித்தம் தவஞ்செய் குமரியெல்லை—வட
> மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
> மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு."

பாட்டுத் திறத்தால் வையத்தைப் பாலித்திட விரும்பிய பாரதியார், காவியத்தில் தீட்டும் ஓவியமாக இப்பகுதி அமைந்துவிடுகிறது. பாரதத்தின் தென்பால் பரந்து விரிந்து கிடக்கும் நீலக்கடலைக் காட்டி, அக்கடலலைகள் கவரி வீச இடையறுது நெடுந்தவமியற்றும் குமரியைக் காட்டி, வடதிசையின் மாலவன் மலையைக் காட்டி, இவற்றிடையே புகழ் செறிந்து கிடக்கும் புனிதத் திரு நாட்டைக் காட்டித் தம்மைப் பாட்டுக்கொரு புலவராகக் காட்டுகின்றார் பாரதியார். இத்தகைய தாய்த் தமிழகத்தின் சேய்கள் வாழும் நாடுகள் பற்பல. அவற்றுள் தாமரை மொட்டுப்போலத் தாயின் அடியைத் தொட்டுக் கிடக்கும் இலங்கையையும் இணைக்க விரும்புகின்ற இன்றைய கவிஞரின் கற்பனை கனிவடைந்து கவிதையாகப் பொங்கியெழுகின்றது :

*"பங்கயத்துக் குமரிமுனைப் பாதம் சேர்த்தாள்*
*பசும்பொன்முடி வேங்கடத்தைப் புனைந்தங் கார்த்தாள்;*
*பொங்கிவரும் காவிரியை இடையில் கோத்தாள்;*
*புறமூன்றும் கடற்கன்னி பணியப் பார்த்தாள்;*
*மங்கலம்சேர் மேலைமலைச் செங்கோ லுற்ருள்*
*மலர்மொட்டி லங்கையெனும் மகளைப் பெற்ருள்..."*

எனத் தமிழ்க் குமரியின் அடியையும், முடியையும், இடையையும், செங்கோலையும், முப்புறங்களும் கவரி வீசுவது போல விளங்கும் கடலையும் கவின் பெறக் காட்டுவதுடன் இலங்கையையும் புதல்வியாகப் புனைந்துரைக்கக் காண்கிறோம்.

இது போன்றே ஒரே உவமையைக் கையாண்ட புலவர் பலரும் புதுப்புது வடிவங்களையும் புதுப்புதுச்

சொற்களையும் பயன்படுத்திச் சுவையைப் பெருக்கியுள்ளனர். மாதர்தம் மொழியையும் விழியையும், நடையையும் தோற்றத்தையும், தேன், மீன், மான், மயில் போன்றவற்றுடன் ஒப்பிட்டுக் கூறுதல் பழைமையான வழக்கெனினும், அதே கருத்தைப் புதுச்சொற்களில் புது முறையில் கூறும் போது கவர்ச்சி ஏற்படக் காண்கிறோம்.

" மானைப் பழித்த விழியுடையாள்—ஒரு
மாமயில் போலும் நடையுடையாள்
தேனைப் பழித்த மொழியுடையாள்—இவள்
தெய்வம் எனத்தகும் திருவுடையாள்,"

என்றார் கவிமணி.

" மானென அவளைச் சொன்னால்
மருளுதல் அவளுக் கில்லை:
மீன்விழி உடையா ளென்றால்
மீனிலே கருமை யில்லை;
கூன்பிறை நெற்றி யென்றால்
குறைமுகம் இருண்டு போகும்."

என்று தொடங்கிச் செல்வது நாமக்கல் கவிஞரின் கற்பனை. " தாமரை முகம் " என்னும் கற்பனை கவிஞர்களின் உள்ளங்களிலே ஊறிப்போனதொன்று. எனினும், இன்று,

" தாமரை பூத்த குளத்தினிலே—முகத்
தாமரை தோன்ற முழுகிடுவாள்."

எனக் கவிஞர் பாடும்போது புதுமையின் பொலிவைப் பார்க்கிறோம்.

இவ்வாறு ஒரே பொருளைப் புதிய பல முறைகளிலும், புதிய பல சொற்களிலும் அமைத்துக் காட்

டுவதுடன், நெடுநாட்களாக நிலைத்து வருகின்ற ஒரு கருத்தை அப்படியே மறுத்துரைக்கின்ற புதுமையையும் பார்க்கின்றோம். மனிதனது சிந்தனைச் சிறப்பினால் கணந் தோறும் மாறுபட்டு வரும் மாநிலத்தில், கருத்துக்களில் புதுமை புகுவதும் இயல்பேயாகும். இன்றைய புதுக் கருத்துக்கள் நாளையும் இவ்வாறிருக்குமோ என்பதும் ஐயத்திற்குரியதே! ஒவ்வொரு காலத்திலும் இடம் பெறு கின்ற புதுக்கருத்துக்கள் இலக்கியத்திலும் இடம் பெறக் காண்கிறோம். "மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்," எனப் புறநானூறு உயிரெனப் புகழ்ந்துரைக்கின்ற மன்னன், இடைக்காலத்தே, உடம்பெனக் கருதப்பட்டான். இன்றோ, "எல்லோரும் இந்நாட்டு மன்னர்," என்னும் அளவுக்கு, அக்கருத்தும் மாறுபட்டுள்ளது. அன்று, ஆத்தி சூடியில், "மீதூண் விரும்பேல்," என ஔவையார் கூறிய அறவுரை, இன்று புதிய ஆத்தி சூடியில், "ஊண் மிக விரும்பு," என அமைந்துள்ளது.

சொற்களின் அமைப்புக்களிலும், அணிகளிலும், கருத் துக்களிலும், கற்பனைகளிலும் புதுமை புகுவதை இலக்கிய இலக்கண ஆசிரியர்கள் எதிர்பார்த்துள்ளார்கள்; அவ் வாறு புதுமை புகுவதற்கு வழியும் வகுத்துள்ளார்கள்.

"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே."

என்பது நன்னூல். காலத்தின் சுழற்சியினால் ஞாலத்தி லுண்டாகும் மாற்றங்களை உணர்ந்தே பவணந்தியார் இவ்வாறு பகர்ந்துள்ளனர். ஆனால், "புதுமை! புது மை!!" என்னும் ஆரவாரத்தில் மயங்கிப்போய்ப் பழமை

யெனக் கேட்டதும் படமெடுத்தாடுவது விரும்பத் தக்க தன்று. பாருலகின் பெருவாழ்வுக்குரிய நிலையான அடிப் படைகளை – உயிர் நாடி போன்ற உண்மைகளைப் – பண்டை யோர் யாத்த கண்டை நிகர் இலக்கியங்களிற் கண்டு மகிழ் கிறோம். அத்தகைய கருத்துக்கள், என்றும் எத்தகைய மாற்றமும் அடையப்போவதில்லை. "என் தாய் முதிர்ச்சி யுற்றுவிட்டாள் ; எனக்கு இளந்தாய் வேண்டும்," என்று இயம்புவோரை எங்கும் காண முடியாது. ஒரு நாட்டின் பெருமைக்கு அந்நாட்டின் பழமையும் ஓர் ஏதுவாகும். இக்கருத்தினை உள்ளடக்கியே கொற்றவன் குடி உமாபதி சிவனார்,

"தொன்மையவா மெனுமெவையும் நன்றாகா இன்று
தோன்றியநூ லெனுமெவையும் தீதாகா."

எனக் கூறிப் போந்தார்.

இன்று இலக்கியத்துத் தோன்றியுள்ள புதுமைகளுள் தலையாயதாகக் குறிப்பிடத் தகுந்தது, இலக்கிய நடையின் எளிமையேயாகும். ஆட்சியினை மேற்கொண்ட அரசர் களும், ஆதரித்துக் காப்பதற்குரிய பெருநிலக்கிழார்களும், புலமை நலம் பெருகி நின்ற பெரும்புலவர்களும் படித் துணர்ந்து பாராட்டுதற்காகவே பெரும்பான்மையான இலக்கியங்கள் வெளி வரலாயின. எழுதப் படிக்கத் தெரி யாத பாமரமக்களின் இலக்கியச் சுவையனைத்தும், வாய் மொழியாக வழங்கப்பட்டு வந்த நாட்டுப் பாடல்களிலே தோய்ந்து கிடந்தன. மன்னராட்சி மாறி, குடியாட்சி யோங்கி, மூலை முடுக்குக்களெல்லாம் அறிவுச்சுடர் பரவி வரும் இக்காலத்தில், எழுதப்படிக்கத் தெரிந்த எல் லோருமே இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டுள்ளனர்.

உரை நடையாயினும், செய்யுளாயினும், எல்லோரும் படித்துணரப் பயன்பட வேண்டுமென்ற ஆர்வம் மேலோங்கியுள்ளது. ஓடி விளையாடும் பாப்பா முதற்கொண்டு, ஆடி அடங்கிய பாட்டன் வரையிலே, இலக்கியத்தில் ஆர்வம் காட்டக் காண்கிறோம். அறிவியற்கலைஞர்கள், பொருளியல் வல்லுநர்கள், அரசியல் அறிஞர்கள், மெய்ப்பொருள்மேதைகள், சீர்திருத்தச் சிற்பிகள்போன்றோரெல்லாரும் தத்தம் கருத்துக்களை இலக்கியச் சுவை ததும்ப எழுதவும் பேசவும் காண்கின்றோம். செய்தித் தாளுலகில் சிறுவர் பகுதி, தொழிலாளர் பகுதி, தத்துவப் பகுதி போன்றதெதுவாயினும் இலக்கிய நயம்பட அமைவதைப் பார்க்கிறோம்.

"தோட்டத்தில் மேயுது வெள்ளைப்பசு—அங்கே
துள்ளிக் குதிக்குது கன்றுக்குட்டி"

இது போன்று இன்று குழந்தைகள் பாடிப் பரவசமடைதற்கேதுவான பாடல்கள் பல தோன்றி வருகின்றன. மொழிப் பற்றற்றோர் விழிப்புற்றுணரவும், நாட்டுணர் விழந்தோர் நாடி முறுக்கடையவும், சமூக வாழ்வினுள் நுழைந்துவிட்ட கண் மூடிப் பழக்கங்களை மண் மூடிப் புதைக்கவும், வாழ்வின் பொலிவுக்கு வழி வகைகளைக் காட்டவும் எளிய நடையில் எழிலார் நூல்கள் நாள் தோறும் வெளி வரக் காண்கிறோம். கட்டுரைகள், கதைகள், புதினங்கள், சிறு கதைகள், நாடகங்கள் அனைத்திலும் இத்தகைய புது நடை பெரும்பயன் விளைத்து வரப் பார்க்கிறோம்.

தெறுகதிர்ச் சுடரோன் நடுநின்று காய, நெடுநிலமனைத்தும் நீர் வற்றி வறண்டு, உயிரினமனைத்தும் கதி

கலங்கும் வேளையில், குடி மக்களெல்லாம் வான் நோக்கி வாழ்வதியல்பு. அந்நேரத்தில், மின்னி மேகம் பரவி, இடியிடித்து மழை பொழிந்து, ஆற்றிலே நீர் திரண்டு, புதுப்புனலாகப் புரண்டு வருகின்ற காட்சியைக் காணும் உழவர்களின் உள்ள மகிழ்வுக்கு அளவே இல்லை. இது போன்றே இலக்கிய உலகிலும், வளங்குறைந்து வறட்சி ஏற்படுவதுண்டு. அத்தருணத்தில், புதுமையெனும் புதுப்புனல் பாய்ந்து, செழுமையும் கொழுமையும் சேர்த்து வளமும் வனப்பும் ஊட்டுகிறது. இத்தகைய புதுப்புனலே இலக்கிய வளர்ச்சியின் உயிர் நாடியெனக் கொள்ளுதல் வேண்டும். புதுமை வளர இலக்கியம் வளரும். இலக்கியம் வளரத் தமிழ் மொழி வளரும். தமிழ் மொழி வளரத் தமிழகம் வளரும். தமிழகம் வளரத் தாரணி வளரும்.





